# புதுமை கண்ட பேரிருவர்

பத்தாம் வகுப்பு







...ிங் கம்பெனி (ரிஜிஸ்ட்)
...ராஸ்-1

# புதுமை கண்ட பேரறிஞர்

(துணைப் பாட நூல்)

பத்தாம் வகுப்பு

ஆசிரியர்
த. செங்கல்வராய பிள்ளை, B.A.,L.T.,
முன்னாள் தலைமை ஆசிரியர்,
பச்சையப்பன் கல்லூரி உயர்நிலைப் பள்ளி, சென்னை.

ஓரியண்ட் பப்ளிஷிங் கம்பெனி
(ரிஜிஸ்ட்)
3, கொண்டி செட்டித் தெரு, சென்னை—1,

 1968 விலை: ரூ. 1-00

# முகவுரை

இந்நூல் இருவருடைய வரலாறுகளைப் பற்றியும் அவர்கள் உலகுக்குச் செய்த சிறந்த பெருந்தொண்டுகளைப் பற்றியும் விளக்கமாக எடுத்துரைக்கின்றது. உலகுக்கு நன்மை செய்து அழியாப் புகழ் பெற்ற அவ்விருவர் லியோ தால்ஸ்தாய் என்பவரும், கிரிஸ்தபர் கொலம்பஸ் என்பவருமாவர். இப் பெரியோர்கள் வெவ்வேறு வகையில் உலகுக்குப் புது வழி காட்டியுள்ளனர். லியோ தால்ஸ்தாய் என்ற இரஷிய நாட்டு ஞானி அகவிருள் போக்கி அறிவொளி பரப்பி நல் வாழ்வுக்குரிய புதுவழி காட்டியவர். கிரிஸ்தபர் கொலம்பஸ் என்ற வீர மாலுமி பொன் விளையும் நாடுகளைக் காண முயன்று புது உலகுக்குச்செல்லப் புதிதாகக் கடல் வழி கண்டவர்.

இருவரும் தத்தம் துறைகளில் இன்னல்களுக்கும் இடுக்கண்களுக்கும் ஆளாயினர்; எனினும் உயரிய நோக்கம், தளராத ஊக்கம், உள்ளத்தின் உறுதி, இடையறு உழைப்பு ஆகிய போற்றற்குரிய பண்புகளால் இடர்களைப் போக்கித் தங்கள் குறிக்கோள்களைக் கடைப் பிடித்து வெற்றி கண்டனர். அகத்துறைக்கு வழி காட்டிய தால்ஸ்தாயும் புறவாழ்விற்கு வழிகண்ட கொலம்பசும் உலகத்தின் பாராட்டிற்கும் நன்றிக்கும் உரியவர்கள். அவர்கள் வரலாறுகள் இளைஞர்களுக்குப் பேரார்வத்தை ஊட்டிப் பயன் விளைக்கும் என்று திண்ணமாகக் கூறலாம்.

இரு பேரறிஞருடைய வரலாறுகளும் இனிய எளிய தமிழில் எழுதப்பட்டுள்ளன. மாணவ மாணவியரும், பிறரும் இந்நூலைப் படித்துப் பயன்பெற வேண்டுமென்பது எமது பேரவா.

ஆக்கியோர்.

# பொருளடக்கம்

# 1. தால்ஸ்தாயின் பிறப்பிடம்

உயரிய பண்பாடுகளாலும் புரட்சிகரமான புதிய கருத்துக்களாலும் உலக மக்கள் அனைவருடைய உள்ளத்தையும் கவரும் மகான்களும் பேரறிஞர்களும் பல்லாண்டுகளுக் கொரு முறையே இவ்வுலகில் தோன்றுகிறார்கள். அவர்கள் மக்களிடையே அறியாமையாகிய அக விருளைப் போக்கி அறிவொளி பரப்பும் ஆற்றல் வாய்ந்தவர்கள். கௌதம புத்தர், கன்ப்யூசியஸ், இராமானுசர், சாக்ரடீஸ், மகாத்மா காந்தி ஆகியோர் அத்தகைய ஆற்றல் பெற்ற பெரியோர்களாவர். அவர்களும் அவர்களைப் போன்ற மகான்களும் உலகம் போற்றும் உத்தமர்களாவர். அவர்களில் ஒருவர் லியோ தால்ஸ்தாய் என்பவர். அவர் உள்ளத்தில் தோன்றும் கருத்துக்களை உள்ளவாறு பிறர்க்கு எடுத்துரைக்கும் ஆண்மையும் சொல்லிய வண்ணம் செயலாற்றும் சீலமும் வாய்ந்தவர்; ஏழை, எளியவர் நலன்களே தமது நலமெனக் கருதி வாழ்ந்த பிறர்க் குரியாளர். அவர் ஒழுக்கத்தின் சிகரமாகவும் உண்மையின் உறைவிடமாகவும் விளங்கினார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், இரஷிய நாட்டில், நவநாகரிக எல்லையின் நெடுந்தூரத்

திற்கப்பால் சில பெரும் பண்ணைப் பிரபுக்களின் குடும்பங்கள் அமைதியாக வாழ்ந்து வந்தன. அத்தகைய பெரும் பண்ணைக் குடும்பங்களில் தோன்றிப் புகழொடு வாழ்ந்தவர்கள் இரஷியக் கவிஞர்கள் புஷ்கின் (Pushkin), லெர்மன் தோவ் (Lermontov) என்பவர்களும், கொகோல் (Gogol), துர்கினீவ் (Turgenyev), தால்ஸ் தாய் என்னும் எழுத்தாளர்களும் பேரறிஞருமா அமைதியான வாழ்க்கை நடத்தியதால் அப்பண்ணை யார் குடும்பங்கள் ஆக்க வேலைகளைச் செய்ய வாய்ப் பிருந்தது. அவர்களுக்கு வாழ்க்கைப் போராட்டமும் வீண் அலைச்சலும் இல்லை. அவர்கள் வண்டிகளில் பிரயாணம் செய்தனர். படிப்பதற்கும் சிந்தனைக்கும் அவர்களுக்குப் போதிய ஒய்விருந்தது. மக்கட் பேறு டைய அப்பண்ணையார் குடும்பங்களில் பிள்ளைகள் நல்ல பழக்க வழக்கங்களும், அச்சமின்மையும்,நாட்டுப் பற்றும் உடையவர்களாக இருந்தனர். அவர்கள் பல மொழி களைக் கற்றனர். பண்ணைப் பிரபுக்கள் தங்கள் பண்ணை களில் உழைக்கும் பண்ணையாட்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வந்தனர். அதனுல் அவர்கள் நாட்டில் வன்மை மிக்க நிலையான ஆட்சியையே விரும்பினர். ஒய்வு நாட்களில் தவருமல் ஆலயங்களுக்குச் சென்று ஆண்டவனைத் தொழுவர். அவர்கள் நோய்வாய்ப் படின் மருத்துவர்களிடம் செல்வது அருமை. நோயி னின்று மீளாது முடிவெய்தினுலும் அது ஆண்டவ னருள் என்று ஆறுதலடைவர்.

பண்ணைகளில் வாழ்ந்த அப்பிரபுக்களுக்கு இல்லாத தொன்றில்லை. பால் தரும் ஆடு மாடுகள், பன்றிகள், வாத்துக்கள், கோழிகள், வான்கோழிகள் முதலியன குறைவின்றி இருந்தன. இனிய பாற்கட்டியும், வெண் ணெயும், ரொட்டியும் நிரம்பக் கிடைத்தன. வேட்டை

நாய்களும் சவாரிக் குதிரைகளும் பண்ணையார் வாழ்க்கையில் மதிப்பிற்குரிய இடம் பெற்றன.

பண்ணையின் பெரு நிலப் பரப்பில் பண்ணையாட்கள் தலைமுறை தலைமுறையாகப் பிறந்து வளர்ந்து [illegible] நாளெல்லாம் பண்ணைகளிலேயே பணிபுரிந்து [illegible]ஈடனர். பிரபுக்களின் கோச்சு வண்டி ஓட்டுபவரும் வாழையடி வாழையாய் ஒரே பண்ணையில் பணி புரிந்து வந்தனர். சில சமயங்களில் சாட்டையடி பட்டாலும் அவர்கள் துன்பங்களைப் பாராட்டாது ஆள்வோர் குடும்பங்களில் பணிபுரிவதில் பெரிதும் ஆர்வம் காட்டினர். அவ்வாட்கள் பண்ணையாருக்கோ அவர்கள் ஆடு மாடுகளுக்கோ தீங்கு நேர்ந்தால் அத்தீங்கு தமக்கு நேர்ந்ததாகக் கருதித் துன்புறுவர். பண்ணைகளுக்கு நாடோடிப் பிச்சைக்காரர்களும், யாத்திரிகர்களும், சோம்பேறிகளும் திரள் திரளாக அடிக்கடி உதவியை நாடிச் செல்வதுண்டு. இத்தகைய சூழ்நிலையில் லியோ தால்ஸ்தாய் பிறந்தார்.

இரஷிய நாட்டில் தூலா மாகாணத்தில் யாஸ்நய போல்யானு என்னும் பெரும் பண்ணை மாளிகையில் 1828 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 28 ஆம் நாள் தால்ஸ்தாய் பிறந்தார். அவர் பிறந்த பெரும் பண்ணை அவருடைய புகழ்மிக்க பாட்டனுருக் குரியதாகும். அவருடைய முன்னேர்கள் பதினரும் நூற்றண்டிலிருந்து அந்தப் பண்ணையின் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தனர். தால்ஸ்தாய் தமது பாட்டனுருடைய குண நலங்களைப் பற்றிப் பெரிதும் பாராட்டிப் பேசுவதுண்டு. அந்தப் பாட்டனர் பண்ணையாட்களைக் கடுமையாக நடத்தியதில்லை. பணியாட்கள் அவரிடத்தில் பேரன்பு-

காட்டினர். அவருடைய நேர்மை, நடு நிலைமை, மன மொழி, மெய்த்தூய்மை ஆகிய சிறந்த இயல்புகள் அவர்கள் உள்ளத்தைக் கவர்ந்தன. தால்ஸ்தாயின் தந்தை நிக்கொலஸ் என்னும் போர்வீரர். மரியா ஒல் கான்ஸ்கி எனும் அரசிளங்குமரி அவருடைய அன்னை அவருக்கு ஆண் மக்கள் நால்வரும் மகளார் ஒருவ இருந்தனர்.

நிக்கொலாய், செர்ஜி, திமித்ரி, லியோ ஆகிய நால்வரும் புதல்வர்கள். ஐந்தாவதாகப் பிறந்த மகளின் பெயர் மரியாள். அவர்களில் லியோ தால்ஸ்தாய் நான்காவது புதல்வர்.

# 2. இளமைப் பருவம்

நிக்கொலஸ் தால்ஸ்தாய் பிரபுவும் இளவரசி மரியா ஒல்கான்ஸ்கியும் யாஸ்நயபோல்யானு எனும் பெரும் பண்ணையில் தம் மக்களுடன் இனிய வாழ்க்கை நடத்தி வந்தனர். மாளிகையின் இருமருங்கும் பணியாட்கள் வசிக்கும் கட்டிடங்கள் இருந்தன. பல்லாண்டுகளுக்குப் பின்னும் தால்ஸ்தாய் மாளிகையின் அழகு அழியா மலிருந்தது. மாளிகையைச் சுற்றி வானுற ஓங்கி வளர்ந்திருந்த மரங்களும் சோலைகளும் தால்ஸ்தாய் குடும்ப வரலாற்றைத் தலைமுறை தலைமுறையாய்க் கண்டறிந்தவை போல் கம்பீரக் காட்சியளித்தன. இயற்கை எழில் சூழ்ந்த அழகிய மாளிகையில் இளவரசி மரியாவின் ஐந்து குழந்தைகளும் பிறந்து வளர்ந்தன. நிக்கொலஸ் பண்ணையை மேற்பார்வையிடுவதற்கும், பண்ணை சம்பந்தமான வழக்குகளைக் கவனிக்கவும் அடிக்கடி வெளியில் சென்று வருவார். சில சமயங்களில் வேட்டை நாய்களுடன் வேட்டைக்குச் செல்வதுண்டு. லியோ தால்ஸ்தாய் இளமையிலேயே அவரிடத்திலிருந்து விருந்தினரை உபசரித்தல், பிறரிடம் நட்புடன் பழகுதல், நகைச்சுவை பயக்கும் சொல்வன்மை, இயற்கை விருப்பம், அழகைக் கண்டு மகிழ்தல், வேட்டை

யாடுதல், உடல் நலத்தைப் பெருக்கல் ஆகிய பண்புகளைப் பெற்ருர்.

தந்தை அடிக்கடி வெளியில் சென்றதனுல், தாய் மரியா அவர்களே பிள்ளைகளை வீட்டில் நன் முறையில் வளர்த்து நல்ல பழக்கங்களை உண்டாக்கி, அவர்களுக் வேண்டிய கல்வியை அளித்து வந்தார். அவ்வம யார் அகத்தழகும் புறத்தழகும் வாய்ந்த அன்புணர்ச்சி மிக்கவர்; ஓய்வு நேரங்களில் இசைக்கலையி லும், இலக்கியங்களைப் படிப்பதிலும், கவிகள் இயற்று வதிலும் பொழுது போக்குவார். தால்ஸ்தாய் இரண்டு வயதாகு முன்பே தாயை இழந்தார் எனினும் அவ் வம்மையாருடைய உருவத்தைத் தெய்வீகம் பொருந் திய உருவமாகவே அவர் உள்ளத்தில் பதியும்படி செய்து கொண்டார். அவருக்கு இடுக்கண்கள் வரும்போதெல் லாம் அவ்வம்மையாரது அழிவில்லாத ஆத்மாவின் துணையை நாடி வணங்குவது அவரது வழக்கம்.

அன்னை மரியாள் இறந்தபோது மூத்த பிள்ளை நிக்கலாய்க்கு ஆறு வயதாயிற்று. தாயின் அறிவும் அன்பும், சிந்தனையும் வளர்கின்ற மக்களுக்கு இல்லா மற் போயின. தாயின் வளர்ப்பும் பராமரிப்பும் இழந்த பிள்ளைகள் வயது மிக்க தந்தையுடன் பாட்டியார் பொறுப்பிலும், நெருங்கிய உறவினரும் தெய்வ பக்தி வாய்ந்தவருமான அலெக்சாந்திரா என்ற அம்மை யாருடைய பொறுப்பிலும் வளர்ந்தார்கள். மற்ெருரு நெருங்கிய உறவினரான தாத்தியாளு என்னும் ஓர் அம்மையார் அவர்கள் கல்விப் பயிற்சியில் கண்ணும் கருத்துமாக இருந்தார். தாய் தந்தையருக்கு அடுத்த படியாக அவ்வம்மையார் தங்களைக் கருத்தோடு

நல்ல பயிற்ச்சியளித்து வளர்த்ததாக லியோ தால்ஸ் தாய் குறிப்பிட்டுள்ளார்.

குழந்தைப் பருவத்தில் தால்ஸ்தாய் உள்ளத்தில் எழுச்சி பெற்ற எண்ணங்களும், அவற்றின் வாயிலாக அவர் பெற்ற அறிவும் அளவிடற் கரியனஎன்று அவர் [illegible]ட காலத்திற்குப் பின் அடிக்கடி நினைவு கூர்ந்து வாழ்வதுண்டு. அவ்வனுபவத்தில் நூறிலொரு மடங்கு கூடப் பிற்காலத்தில் பெற்றதில்லை என்றார். அவர் பின்னர் எழுதிய 'குழந்தைப் பருவம்' என்ற நூலில், "இன்பம் நிறைந்த குழவிப் பருவம் நழுவிச் சென்று விட்டது. மீண்டும் வருமோ!" என்று உணர்ச்சியோடு கூறியுள்ளார்.

"இனி நினைந்திரக்கமாகின்று! கல்லா
இளமை எளிதோ தானே? யாண்டுண்டு கொல்லோ!"

என்று முது பெருந் தமிழ்ப் புலவர் ஒருவர் இனிய இளமை திரும்பி வருமோ என்று இரக்கப்படுவதுபோல் தமது இளமைப் பருவத்தைப் பற்றித் தால்ஸ்தாய் பெரிதும் பாராட்டியுள்ளார்.

"என் இளமைப் பருவத்தில் என்னைச் சூழ்ந்திருந்த அனைவரும், தந்தைமுதல் கோச்சுவண்டி ஓட்டும் பணியாள் ஈறாக எல்லோரும் ஒப்புயர் வில்லாத நல்லோர்கள். உலகம் எழில்மிக்கது. உலகத்தையும் அதிலுள்ள அனைத்தையும் நல்லனவென்று போற்று கின்றேன்," என்று அவர் எழுதிய நூலில் குறித் துள்ளார். மக்கள் தீங்கிழைக்க இயலுமென்றோ நடு நிலைமையும் நியாயமும் அற்ற வகையில் அவர்கள்நடக்க இயலுமென்றோ இளைஞர் தால்ஸ்தாய் நினைத்ததில்லை.

அவ்வாறு நடப்பரென்று நம்பியது மில்லை. இத்தகைய கள்ளமிலா உள்ளத்துடன் தால்ஸ்தாய் வளர்ந்து வந்தார்.

உலகத்தில் நல்லவையன்றித் தீயவை ஒன்று மில்லை என்றும், நல்லாரையன்றித் தீயார் ஒருவருமில் யென்றும் நினைத்திருந்த தால்ஸ்தாய், ஐந்து வய மாஸ்கோவிலிருந்தபோது ஒரு நாள், தாம் ஒரு பறவை போலப் பறக்க முடியுமென்று கருதி அவ்வாறு செய்ய முயன்றார். உயரத்திலிருந்த ஒரு பலகணிமீதேறி அங்கிருந்து பறக்க முயன்றவர் முற்றத்தில் விழுந்து மூர்ச்சை யடைந்தார். நல்ல காலமாக எலும்பொன்றும் முறியவில்லை. ஆனால் அவர் தம் நினைவு பெறுவதற்குப் பதினெட்டு மணி நேரமாயிற்று.

ஐந்தாண்டுகள் நிரம்பிய தால்ஸ்தாயும் அவர் குடும்பத்தாரனைவரும் மாஸ்கோ நகரத்துக்குச் சென்றார்கள். தால்ஸ்தாயின் தந்தையும் பாட்டியாரும் குடும்பத்தைக் கவனித்து வந்தனர். தமது பிறப்பிடத்திலிருந்தது போலவே மாஸ்கோவில் வசதிமிக்க நல்ல வீட்டில் வாசம் செய்தனர். அவர்களுடைய வேலையாட்களும் எப்போதும் போலப்பணிபுரிந்து வந்தனர். வீட்டிலேயே கல்வி கற்பிக்க ஆசிரியர்கள் வந்து பாடங்களைக் கற்பித்தனர். இவ்வாறு வாழ்ந்து வரும்போது தால்ஸ்தாயின் ஒன்பதாம் வயதில் தூலா மாகாணத்தில் தமது பண்ணையின் விவகாரத்தைக் கவனிக்கச் சென்ற அவருடைய தந்தை, தெருவழியே போய்க்கொண்டிருந்தபோது திடீரெனக் குப்புறக் கீழே விழுந்து மூர்ச்சை யடைந்து உயிர் துறந்தார். மகனை இழந்த பாட்டியாரும் மக்களும் ஆற்றெணுத் துயரத்தி

லாழ்ந்தனர். பின்னர் ஓராண்டுக்குள் துயர் பொருது உடல் நலமிழந்து பாட்டியாரும் இறந்துவிட்டார். அப்போது தால்ஸ்தாய் குடும்பச் சொத்து ஒரு பாதுகாப்புக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது

ஆடும் பருவத்திலிருந்த சிறுபிள்ளை தால்ஸ்தாய்க்கு ...புடன் இனிய மொழிகளால் எளிய முறையில் ஜெர்மன் மொழி கற்பித்து வந்த ஓர் ஆசிரியர் நிறுத்தப் பட்டு வன்னெஞ்சு படைத்த ஒரு பிரெஞ்சு மொழி ஆசிரியர் பொறுப்பில் தம்மை விடுத்ததை நினைந்து நினைந்து அவர் வருந்தினர், பாட்டியார் பிரிவும் நல்லாசிரியர் தொடர்பு நின்றதும் அவர் பெருந் துயருக்குக் காரணமாயின. மற்றும் 1846 ஆம் ஆண்டில் அவரையும் அவர் உடன்பிறந்தாரையும் பாதுகாத்து வந்த உறவினர் அலெக்சாந்திரா அம்மையார் இறந்து விட்டார். பாலினு என்னும் மற்றொரு நெருங்கிய உறவினர் அந்த ஐந்து மக்களையும் கஜான் நகரத்திற்கு அழைத்துச் சென்று அங்குத் தம்முடைய வீட்டிலேயே அவர்களைப் பாதுகாத்து வந்தார். அவ்வம்மையார் அப்பிள்ளைகளுக்காக எத்தகைய தியாகம் செய்ய வேண்டுமானுலும் செய்யத் துணிந்திருந்தார். கோடை விடுமுறையை வழக்கம்போல் யாஸ்நயபோல்யானுவில் கழித்துவிட்டு ஐந்து பிள்ளைகளும் கஜான் நகரத்திற்குத் திரும்பினர். அப்போது லியோ தால்ஸ்தாய்குப் பதின்மூன்று வயது; அவர் தங்கை மரியாளுக்குப் பதினொரு வயது ஆயிற்று.

# 3. கஜான் நகரத்தில் கல்வி பயிலல்

வால்கா பிரதேசத்திலுள்ள கஜான் நகரத்தில் பல்கலைக் கழகம் ஏற்பட்டபின் கலைக்கும் கல்விக்கும் அந்நகரம் நிலைக் களமாக விளங்கியது. சுற்றிலுமுள்ள பல்வேறிடங்களிலிருந்து அனேக பிரமுகர்கள் தங்கள் பிள்ளைகளைப் பல்கலைக் கழகத்தில் சேர்ப்பதற்காக வருவதும் போவதுமாக இருந்தனர். அந்நகரத்தில் அடிக்கடி நடனங்களும், நாடகங்களும், விருந்துகளும் நடை பெற்றன. கேளிக்கைகளிலும் களியாட்டங் களிலும் கலந்து கொள்ளப் பலர் அந்நகரத்திற்கு வந்தனர்.

தால்ஸ்தாய்க்கு மூத்த மூன்று சகோதரர்கள் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினர். நிக்கலாய் திறமையுடன் கல்வி பயின்று மேல் வகுப்பு களுக்குச் சென்றார். செர்ஜி களியாட்டங்களிலும் கேளிக்கைகளிலும் காலத்தைப் போக்கித் தீய பழக்கங்களை மேற்கொண்டார். மூன்றாவது சகோதரர் சமயவழிபாடுகளில் மிகவும் ஈடுபட்டவராகவும் விரதங்

களை மேற்கொள்பவராகவும் இருந்ததால், மற்ற மாண வர்கள் அவருக்கு "நோவா" வெனப் பெயரிட்டுப் பழமைப் பித்தரென்று பரிகசித்தனர். மரியாள் தனியாக ஒரு பாடசாலையில் கல்விபயின்று வந்தார். கஜான் பல்கலைக்கழகத்தில் கீழை நாட்டு மொழிகளைக் கற்பித்தல் ஒரு சிறந்த அமிசமாக விளங்கியது. சீனம், ...கம், அர்மினியம், சமஸ்கிருதம், அராபி முதலிய மொழிகள் அங்குக் கற்பிக்கப்பட்டன.

லியோ தால்ஸ்தாய் கஜான் நகரில் தாமரை இலை நீர்த்துளி போலிருந்தார். குடும்ப வாழ்க்கையின் வசதி களில் அவருக்குக் குறைவில்லை. எனினும் அவர் உள்ளன் புடன் கலந்து பழகுவதற்குரிய தோழர்களில்லை. அன்னையின் மரணத்தால் தாயன்பாகிய பெரும் பேற்றை இழந்தார். கஜான் நகர சமூகம் பெரும் பண்ணைப் பிரபுவின் புதல்வர் தால்ஸ்தாயை வர வேற்றது. ஆனல் ஆடம்பர சமூகத்தில் கலந்து பழகும் இயல்பு அவரிடம் இல்லை. மேலும் அவரைப் பிறர் விரும்பி நட்பு கொள்ளுதற்குரிய கவர்ச்சிகரமான தோற்றமும் அவருக்கு வாய்க்கவில்லை. அதற்காக அவர் உளம் வருந்தியதுமுண்டு. அகத்தழகில் ஈடுபடுவோர் உலகில் மிகக் குறைவன்றோ? ஆனல் தால்ஸ்தாயின் தனிமை அவரைச் சிந்தனைச் சிற்பியாக்குவதற்கு வாய்ப் பளித்தது.

ஜுஷ்கோவ் குடும்பச் சீமாட்டியார் பாலின எனும் அம்மையார் கஜான் நகரத்தில் ஆடம்பரமாக இராஜ போகத்தில் வாழ்ந்து வந்தார். அவர் தால்ஸ்தாயிடம் அளவற்ற ஆதரவும் அன்பும் காட்டி வளர்த்து வந்தார். இன்பமே எந்நாளும் என்று கருதக் கூடிய நிலையில்

வளர்ந்து வந்த தால்ஸ்தாய் வாழ்க்கை அமைதியாகச் செல்லும் படகு என்றும், ஓரின்பத்திலிருந்து மற்ருேரின்பத்திற்கு அழைத்துச் செல்லும் நீண்டதொரு பெருவழி என்றும் கருதினர். பிற்காலத்தில் அவர் இல்வாழ்க்கையைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''என் சுற்றத்தாருடைய ஆடம்பர வாழ்க்கைச் சூழ்நிலையில் வளர்[illegible] எனக்குத் தீய பழக்கங்களே ஏற்பட்டு அவை எ[illegible] அல்லலுக் குள்ளாக்கின. உலக இன்பங்களில் அளவுக்கு மீறிய பற்றுண்டாகும்படி செய்தது இச்சீமாட்டியின் மாளிகை வாழ்வே,'' என்று மிக்க வருத்தத்தோடு தமது அனுபவத்தை வெளியிட்டுள்ளார்.

தால்ஸ்தாய் தம் உடன் பிறந்தாருடன் கஜான் என்னுமிடம் வந்து சில வாண்டுகள் கழிந்தன. அவர்களுக்குக் கல்வி பயிலும் பருவம் வந்தபோது அக்காலத்து வழக்கப்படி அவர்கள் வீட்டிலேயே அமர்த்தப்பட்ட ஓர் ஆசிரியரிடம் பிரெஞ்சு மொழியைக் கற்று வந்தார்கள். பிரெஞ்சு மொழியும் இலத்தீனும் ஐரோப்பாவில் அப்போது முதலிடம் பெற்றிருந்தன. உயர் குடிப்பிறந்தோர் அனைவரும் தங்கள் தாய்மொழியைக் காட்டிலும் பிரெஞ்சு மொழியையே பெரிதும் விரும்பிக் கற்றனர். பிரெஞ்சு மொழி கற்கும்போது ஓய்வு நேரங்களிலெல்லாம் தால்ஸ்தாய் அலெக்சாந்தர் டியூமா போன்ற பிரபல பிரெஞ்சு எழுத்தாளர்கள் எழுதிய அரிய பெருங் கதைகளைப் படிப்பது வழக்கம். அக்கதைகளின் சிறந்த அம்சங்கள் அவரது உள்ளத்தைக் கவர்ந்தன. கதைகளில் பொதிந்துள்ள சீரிய கருத்துக்களை அவர் பெரிதும் சிந்தித்துப் பார்ப்பதுண்டு. 'நாவல்' என்று சொல்லப் படும் நவீன இலக்கியங்களின் இயல்புகளை நன்கு அறிந்து கொண்டார்.

தால்ஸ்தாய் பிரெஞ்சு மொழிக் கல்வியில் ஆழ்ந்திருந்ததால் தாய்மொழியாகிய ரஷிய மொழியையும் ரஷிய இலக்கிய மேம்பாட்டையும் இளமையிலேயே மறந்தார். அவருக்குப் பிற்காலத்தில்தான் தாய்மொழியில் ஆர்வம் பிறந்தது. தமது உழைப்பினுல் மொழியிலும் அவருக்கு மிக்க புலமை உண்டாயது.

வீட்டிலேயே சில வாண்டுகள் கல்வி பயின்ற பின்னர் தால்ஸ்தாய் கஜான் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினர். அவருடைய உறவினர் அவருக்கு ஊக்கமும் ஆதரவும் அளித்தனர். உயர்தரக் கல்வியளித்து அவரை அரசாங்கத்தில் ஒரு பெரிய பதவியில் அமர்த்த வேண்டுமென்பது பாலினு என்னும் ஜுஷ்கோவா சீமாட்டியின் பேரவாவாகும்.

கஜான் நகரம் பீட்டர்ஸ்பர்க், மாஸ்கோ ஆகிய இரு பெரிய இரஷ்ய நகரங்களுக்கு அடுத்தபடியாகச் சிறப்பு வாய்ந்த இடம். ஆடல், பாடல், கேளிக்கைகளுக்கு அங்குக் குறைவேயில்லை. செல்வம் மிக்க குடும்பத்துப் பிள்ளைகள் தால்ஸ்தாயின் நண்பர்களாயினர். குடும்பக் கவலை இன்னதென்றறியாமல் வளர்ந்த தால்ஸ்தாய் தனவந்தர் பிள்ளைகளுடன் தமது காலத்தைக் கழிக்க நேர்ந்தது. ஓய்வுக் காலங்களில் அவர்களுடன் சிங்காரத் தோட்டங்களுக்கும் உல்லாச உறைவிடங்களுக்கும் அவர் சென்று வந்தார். ஆனுல் அவ்வப்பொழுது அவருடைய நண்பர்கள் அவருக்குக் கொடுக்கும் பிரெஞ்சு நூல்களை இடையருது படித்து வந்தார்.

தால்ஸ்தாய் புத்தகங்களைப் படிக்கும்போது அவைகளிலுள்ள பொருள்களைப் பற்றி ஆழ்ந்து சிந்தனை

செய்வார். சிறந்த விஞ்ஞானிகளைப் போல் எதற்கும் காரண காரியம் காண விழைவார். இவ்வியல்பு அவரை விட்டு எப்பொழுதும் நீங்கியதில்லை. இங்ஙனம் அவர் தமது நல்லறிவை வளர்த்துக் கொண்டதுபோல் அவ்வப் பொழுது விளையாட்டுகளிலும் கலந்துகொண்டு உடல் உரமும் பெற்றார். அதனால் அவர் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருந்தார்.

அவர் கல்வி பயின்ற கல்லூரியில் கல்வி முறை கடினமானதாக இல்லை. மற்றும் அங்குப் பெருங்குடிப் பிள்ளைகள் கல்வி பயின்று வந்ததால் கட்டுப்பாடும்,கடுமையான விதிவிலக்குகளும் அதிகமாக இல்லை என்று சொல்ல வேண்டும். அதனால் தால்ஸ்தாய் மற்ற நண்பர்களுடன் உல்லாசமாகக் காலங்கழித்து வந்தார். ஆனால் சில நாட்களுக்குள் இவ்வித வாழ்க்கையில் அவருக்கு வெறுப் புண்டாயிற்று. செல்வாக்கு மிக்க குடும்பத்துப் பிள்ளைகளின் பழக்க வழக்கங்களை அவர் சிறிதும் விரும்பவில்லை. அவர்கள் பழக்கங்கள் அறிவை மழுங்கச் செய்து நல்லொழுக்கத்தைக் கெடுப்பவை யென்று கருதினார். எளிய வாழ்க்கையையும் உயர்வுள்ளலையுமே அவர் போற்றினார்.

1844ஆம் ஆண்டு லியோ தால்ஸ்தாய் மெட்ரிக்குலேஷன் தேர்வில் வெற்றி பெற்றார். அப்பொழுது அவருக்கு வயது பதினைந்து. அவர் மேலும் கல்லூரிக் கல்வி கற்க விரும்பிக் கல்லூரியில் சேர்ந்தார். முதன் முதலில் சட்டக் கல்வியைத் தொடங்கினார். வழக்கறிஞராக வர விரும்பியபோதிலும் அவருக்குச் சிறந்த ஆசிரியர்கள் கிடைக்கவில்லை. அதனால் அவருக்கு ஆர்வமும் முயற்சியும் குன்றிவிட்டன. சட்டக்கல்வி

பயில்வதனால் யாதொரு பயனுமில்லை என்று அவர் திண்ணமாக எண்ணினார்.

பின்னர் தால்ஸ்தாயின் நோக்கம் மற்றொரு பக்கம் திரும்பியது. ஏதேனும் கலைகளைக் கற்றுப் பல்கலைக்கழகப் பட்டம் பெற வேண்டுமென்று அவர் எண்ணினார். எனவே, வரலாறு, மதம் முதலியவற்றைத் தேர்ந்தெடுத்து அப்பாடங்களைப் படித்து வந்தார். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல அத்துறைகளிலும் அவருக்கு அருவருப்புத்தான் உண்டாயிற்று. சரித்திரம் கற்பதனால் யாதொரு பயனும் ஏற்படாதென்று அவர் கருதினார். மதத் துறையிலிருந்த சிற்சில கருத்துக்கள் அவருக்குக் குழப்பம் உண்டாக்கின. அவரிடம் இயல்பாக அமைந்த நுண்மதி எதையும் ஆராய்ந்து முடிவுக்கு வர அவரைத் தூண்டியது. அதனால் தமது ஆசிரியர்களின் சொற்பொழிவுகளுக்கு அவர் செவி சாய்க்க விரும்பவில்லை. அதற்கு மாறாக நுணுக்கமான ஆராய்ச்சியில் அவரது மனம் நாடியது.

இந்த நிலையில்தான் தால்ஸ்தாய், பிரெஞ்சுப் புரட்சிக்குத் தந்தையென்று கருதப்படும் பேரறிஞர் ரூஸ்ஸோவின் நூல்களையும், கட்டுரைகளையும் படிக்கத் தொடங்கினார்; ஒய்வு கிடைத்த போதெல்லாம் ரூஸ்ஸோவின் நூல்களைக் கற்று மனந் தெளிந்தார். ரூஸ்ஸோவின் நூல்களைப் படிக்கப் படிக்க, அவருக்கு ஆடம்பரத்தில் வெறுப்பு ஏற்பட்டது; சர்வாதிகாரத்திற்கு எதிராகச் சினம் பொங்கி யெழுந்தது. தால்ஸ்தாய் ரூஸ்ஸோவை ஒரு தீர்க்கதரிசி என்று போற்றி, அவரது நூல்களைப் படித்துப் படித்து மகிழ்ந்தார். ரூஸ்ஸோவின் சுதந்தர மனப்பான்மையே அவரை முற்றிலும் கவர்ந்தது. 'பெரிய மனிதர்கள்' என்று அழைக்கப்

படுபவர்களின் ஆடம்பரம், பகட்டு, கல்நெஞ்சம், அற்பத் தனம் முதலிய தீய குணங்களை ரூஸ்ஸோ வெறுத்தது போல் தாமும் வெறுத்தார். ரூஸ்ஸோவின் மனிதத் தன்மையை அவர் வியந்து பாராட்டினர்.

நாட்கள் சென்றன. தால்ஸ்தாய்க்குக் கல்லூரிப் படிப்பில் கவனம் செல்லவில்லை. பட்டம் பெற வே[illegible] மென்ற எண்ணத்தையும் அவர் கைவிட்டார். [illegible] தனைக் கல்வி மட்டுமே உயர்ந்தவனுக்குவதில்லையென்றும் வாழ்க்கையாகிய கல்லூரியில் அனுபவம் பெறுவதே சாலச் சிறந்ததென்றும் அவர் எண்ணினர். எனவே அவர் கல்வியில் வெறுப்புக் கொண்டு, யாதொரு பட்டமும் பெருமல் 1847ஆம் ஆண்டில் கல்லூரிப் படிப்பைக் கைவிட்டார். எனினும் உலகினிடமும், உலக வாழ்வினிடமும் அவர் எள்ளளவும் வெறுப்புக் கொள்ளவில்லை. பல வசதிகள் நிறைவாக இருந்தும் தால்ஸ்தாய் பல்கலைக் கழகப் பட்டம் ஒன்றும் பெருமல் கல்லூரிப் படிப்பைக் கைவிட்டது, அவரது உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் வருத்தமுண்டாக்கியது. அவர்கள் வருந்தினர்களே யொழிய, தால்ஸ்தாய் அதற்காக எள்ளளவும் வருந்தியதாகத் தெரியவில்லை.

மனித சுதந்திரத்தில் ஈடுபாடு கொண்ட லியோ தால்ஸ்தாய், உலக மக்களின் நல்வாழ்வுக்காக வாழ விரும்பினர். எனவே ஆடம்பரமும் பகட்டும் மிகுந்த கஜான் நகரத்து வாழ்க்கையிலிருந்து விடுபட்டு நேராகத் தம் பிறப்பிடமாகிய யாஸ்நய போல்யாளுவுக்குத் திரும்பினர். ஆனல் அவருக்கு இன்னது செய்ய வேண்டுமென்று ஒன்றும் புரியவில்லை.

அக்காலத்தில் ஒவ்வொரு பண்ணையிலும் யாதொரு உரிமையும் இல்லாமல் நூற்றுக்கணக்கான உழவர்கள்

உழைத்து வந்தனர். அவர்களை அடிமைகளென்றே சொல்ல வேண்டும். 'உழுது விதைத் தறுப்பாருக் குண வில்லை; பிணிகள் பலவுண்டு; பொய்யைத் தொழுதடிமை செய்வார்க்குச் செல்வங்களுண்டு,' என்று பாரதியார் [illegible]றுவது போல அவ்வுழவர்களெல்லாம் அல்லலுற்றிருந் [illegible]ர். அவ்வுழவர்களின் நிலையைக் கண்டு வருந்திய [illegible]யா தால்ஸ்தாய், அவர்களுடைய வாழ்க்கையைச் செம்மையுறச் செய்ய விரும்பினுர்; பிறருக்குப் பயன் படுமாறு வாழத் துடி துடித்தார். அத்துறையில் அவர் எல்லா முயற்சிகளும் எடுத்தார். ஆனுல் அத்தகைய சீரிய வாழ்வுக்குத் தேவையான பயிற்சியும், செயல் திறனும் அவரிடம் இல்லை. அவரது மனம் குழம்பிற்று.

# 4. இங்குமங்கும்

நேர்மையுள்ளம் படைத்த் தால்ஸ்தாய் அறவழி நின்று, அடிமை உழவர்களுக்கு நல்வாழ்வளிக்க முயன்ற போதிலும், அவர்கள் அவரை ஏற்றுக்கொள்ள முன் வர வில்லை. செல்வச் சீமாஞகப் பிறந்த அவருக்கு ஏழை எளியவரின் பொருட்டு எங்ஙனம் இரக்கம் திடீரென ஏற்படும் என்று ஐயுற்று, அவருக்குத் தெரியாமலே பல விதத்தில் தீங்கிழைக்கத் தொடங்கிஞர்கள். தன் னலத்தை விரும்பாமல் தால்ஸ்தாய் தமது செயலாற் றும் திறனை உழவர்களின் நலனுக்காகவே பயன் படுத்து வார் என்பதில் அவர்களுக்கு எள்ளளவும் நம்பிக்கை இல்லை. மேலும் ரஷ்ய அரசாங்கம் இதற்கு இடங் கொடுக்காது என்றும் அவர்கள் உறுதியாக நம்பிஞர் கள். தவிர, அவருக்கு உழவர்களின் இன்னல்களை அகற்றி ஆக்க வேலைகள் செய்வதில் பயிற்சியும் இல்லை. அதனுல் அவர் தாம் விரும்பியது போல் உழவர்களின் ஒத்துழைப்பைப் பெற இயலவில்லை. தால்ஸ் தாய் மனம் நொந்து, தமது பிறப்பிடத்தை விட்டு, செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கு மாநகரத்தை அடைந்தார்.

செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கு அக்காலத்தில் இரஷிய நாட்டின் தலைநகராக இருந்தது. பின்னர் இதற்கு பெட்ரோகிராட் என்றும், இரஷ்யப் புரட்சிக்குப் பிறகு லெனின் கிராட் என்றும் பெயர் வழங்கலாயிற்று. இப்பெரும் பகுதியில் தால்ஸ்தாய் சிறிது காலம் இருந்து வரலானார். இந் நகரத்திற்கு வந்த சில நாட்களுக்குள் தால்ஸ்தாயின் பழக்க வழக்கங்களில் மீண்டும் மாறுதல்கள் ஏற்பட்டன. புதிய கொள்கைகளைப் பரப்புவதிலும், உழவர்களின் வாழ்க்கை முறையை அமைப்பதிலும் நோக்கங்கொண்ட லியோ தால்ஸ்தாய் களியாட்டங்களில் மறுபடியும் ஈடுபடத் தொடங்கினார். பீட்டர்ஸ்பர்க்கில் தால்ஸ்தாய்க்கு எவ்விதமான அமைதியும் ஏற்படவில்லை. அவ்விடத்தில் மீண்டும் கல்வி கற்க முயற்சி செய்தார். ஆனால் அதற்குத் தகுந்த சூழ்நிலை ஏற்படவில்லை. ஏனெனில் அப்பொழுது ஒரு கொடிய பஞ்சம் நாட்டில் தலைவிரித்தாடியது. அன்றாட வாழ்வுக்குத் தேவையான பொருள்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டது. இந்த அவல நிலையில் அவர் எங்ஙனம் கல்வி கற்க முடியும்?

இதற்குப் பின்னர் தால்ஸ்தாய் மாஸ்கோ நகரத்திற்குச் சென்று அங்குச் சிறிது காலம் தங்கியிருந்தார். மாஸ்கோ அக்காலத்தில் பீட்டர்ஸ்பர்குக்கு அடுத்த பெரிய நகரமாகத் திகழந்தது. அவ்விடத்தில் அவர் பல களியாட்டங்களில் ஈடுபட்டார். ஆடல், பாடல், சூதாட்டம் முதலியவற்றில் அவர் பங்கு கொண்டார். செல்வக் குடும்பத்தில் பிறந்த இளைஞர்களுடன் தொடர்பு கொண்டு, உல்லாச வாழ்க்கை நடத்தி வந்தார். ஊசியைக் காந்தம் கவர்வது போல் மாஸ்கோ நகர வாழ்க்கை தால்ஸ்தாயின் உள்ளத்தைக் கவர்ந்தது.

தால்ஸ்தாய் அவ்வப்பொழுது ஆடம்பர வாழ்க்கை யிலும் களியாட்டங்களிலும் ஈடுபட்ட போதிலும், அவரது மனச்சான்று அவரை உறுத்திக் கொண்டே இருந்தது. அன்றாடம் அவர் எழுதி வைத்த நாட் குறிப்பு ஏட்டிலிருந்து இவ்வுண்மையை உள்ளங் நெல்லிக்கனி போல் தெரிந்து கொள்ளலாம்.

'நான் தூய வாழ்க்கை நடத்துகிறேனா? இத்தகைய களியாட்டங்களில் பங்குகொள்வதனால் எனக்கு ஏற்படும் நன்மை யாது? மனித வாழ்க்கையில் அமைதி காண்பது எப்படி? பசியும் பட்டினியுமாகத் திரியும் மக்களின் துய ரத்தைத் துடைப்பது எங்ஙனம்?' என்ற பலப் பல வினாக் கள் அவரது உள்ளத்தில் எழுந்து ஒன்றோடொன்று மோதிக் கொண்டன. சிற்சில நேரங்களில் தாம் செய்த தவறுகளுக்காகத் தால்ஸ்தாய் வருந்தியதுண்டு.

எனவே லியோ தால்ஸ்தாய் மாஸ்கோ நகரத்தில் வாழ்ந்தபொழுது அவருக்குப் பணக்கார நண்பர்கள் காட்டிய உபசாரங்களில் அப்படியே மயங்கி விடவில்லை. மாஸ்கோ வாழ்க்கை அவருடைய சோதனைக் கால மென்றே நாம் கொள்ள வேண்டும். தம்முடைய களி யாட்டங்களிலும், ஆடல், பாடல், வேட்டைகளிலும் உண்மையான மகிழ்ச்சி கண்டாரில்லை. மன வமைதி யும் காணவில்லை. இத்தகைய சோதனைக்காலம் ஒவ் வொரு பேரறிஞர் வாழ்க்கையிலும் ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும். தமக்கு அவ்வப் போது ஏற்படும் சோதனைகளைப் பற்றி அவரே எழுதுவ தால், உண்மையில் லியோ தால்ஸ்தாய் விரிவான உலகப் புகழுக்குரியவர் ஆவார் என்பதில் ஐயம் உண்டோ?

மாஸ்கோவில் தால்ஸ்தாய் அதிக நாட்கள் தங்கவில்லை. மாஸ்கோ நகரத்து வாழ்க்கையும் அவருக்கு வெறுப்பூட்டியது. மீண்டும் தமது பிறப்பிடத்திற்கு வந்து, தம் சகோதரரான செர்ஜியுடன் சிறிது காலம் வாழ்ந்து வந்தார். இவ்வாறு தால்ஸ்தாய் 1857ஆம் ஆண்டுவரை இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தார். அப்போது அவரது வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது.

# 5. இரஷியப் படையில் தொண்டு

அறிவாற்றலும், உதவி செய்யும் நல்லெண்ணமும் உடைய தால்ஸ்தாய்க்கு யாஸ்நய்போல்யாஞவில் எவ்விதமான மன வமைதியும் ஏறபடவில்லை. உடல் உரமும் மஞேதிடமும் பெற்ற அவர் ஏதேனும் பொறுப்பான வேலையைச் செய்யவேண்டுமென்று விரும்பிஞர். அதற்கு நல்ல தருணமும் வந்தது. 1851ஆவது ஆண்டு அவருடைய சகோதரர் நிக்கோலாய் படைத்தலைவர் பதவி பெற்று ஒரு படையுடன் கருங்கடலுக்கும் காஸ்பியன் கடலுக்குமிடையே காகசஸ் மலைப்பிரதேசத்திலுள்ள பியாட்டி கார்ஸ்கு என்ற விடத்தில் தங்கியிருந்தார். தால்ஸ்தாயும் தம் சகோதரருடன் காகசஸ் பிரதேசத்திற்குச் சென்று இருவருமாக ஒரு சிறிய வீட்டில் வாழ்ந்து வந்தனர்.

அக்காலத்தில் இரஷியாவில் பிரபுக்களும், நற்குடியிற் பிறந்த இளைஞர்களும் காலாட்படையிலோ குதிரைப் படையிலோ சேர்ந்து பணியாற்றுவது வழக்கம். பல்கலைக் கழகத்தில் பட்டம்பெற்ற இளைஞர்களும் இராணுவத்தில் சேர்ந்து பணியாற்றி வந்தனர். இவை எல்லாம் தால்ஸ்தாய்க்கு நன்ருகத் தெரியும். ஆஞல் இராணுவத்தில் உடனே சேர்ந்து பணியாற்ற அவர் தயங்கிஞர்.

ஆனால் நாட்டில் அப்பொழுது ஏற்பட்ட பஞ்சமும், அவருடைய மனக்குழப்பமும் இராணுவத்தில்சேருமாறு தூண்டி விட்டன. அவர் சகோதரரும், உறவினர்களும் இராணுவத்திற் சேருமாறு அவரை வற்புறுத்தினர்கள். இரஷியப் படை அக்காலத்தில் எதற்கும் அஞ்சாததாய் வெற்றி பெறும் படையாக இருந்தது. தொன்று தொட்டுப் புகழ்பெற்ற இரஷியப்படையில் அவர் ஒருவாறு சேர முடிவு செய்தார். கட்டாயப் போர் வீரராகப் பணிபுரிய விரும்பாமல் விருப்பப் போர் வீரராகப் பணிபுரிய விரும்பினர்.

விருப்பப் போர் வீரராகச் சேர்ந்த தால்ஸ்தாய் காகசஸ் பிரதேசத்திலேயே இராணுவப் பயிற்சி பெற்றார். அக்காலத்தில் காகசஸ் மலைப் பிரதேசத்தில் கொள்ளையும் கொலையும் அமைதியைச் சீரழித்தன. அப்பிரதேசத்து மக்கள் முரடர்கள்; எதற்கும் அஞ்சாதவர்கள். அதனால் இராணுவத்திற்கு ஓயாத வேலையிருந்தது. உடல் வன்மையும் மன உறுதியும், மிக்க தால்ஸ்தாயும் மற்ற இளைஞர்களும் ஓயாது உழைத்து அப்பிரதேசத்தில் ஒருவாறு அமைதியை நிலைநாட்டினர். தால்ஸ்தாயின் உற்சாகத்தைக் கண்டு அவரது மேலதிகாரிகள் அவரை ஒரு கட்டாயப் போர் வீரராகச் சேருமாறு அழைத்தனர். தால்ஸ்தாயின் கடமையுணர்ச்சியும், அஞ்சாமை, துஞ்சாமை முதலிய பண்புகளும் மற்ற இரஷிய வீரர்களின் உள்ளங்களைப் பெரிதும் கவர்ந்தன.

இங்ஙனம் தால்ஸ்தாய் 1851ஆம் ஆண்டு முதல் ஏறத்தாழ மூன்றாண்டு இரஷியப் படையில் விருப்பப் போர் வீரராகவே பணியாற்றினர். கட்டாயப் போர்

வீரராகச் சேர்ந்து பணிபுரிய வேண்டிய நிலையும் மிக விரைவில் வந்தது.

விருப்பப் போர் வீரராகச் சேர்ந்து காகசசில் தொண்டாற்றிக் கொண்டிருக்கும் பொழுது, தால்ஸ்தாய் தமது ஓய்வு நேரத்தை வீணாக்கவில்லை புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல் பல கட்டுரை எழுதத் தொடங்கினர். இக்கட்டுரைகள் அவ எழுத்து வன்மைக்குச் சிறந்த சான்ருக விளங்குகின்றன. இவைகளெல்லாம் அவர் பிற்காலத்தில் படைத்த மாபெரும் இலக்கியத்திற்கு ஓர் ஒப்பற்ற வழிகாட்டி யாகத் திகழ்கின்றன என்று கூறலாம். இளமையில் ஏற்பட்ட இத்திறமை பிற்காலத்தில் மக்களின் மனத்திற்கும், உள்ளத்திற்கும் ததுந்தாற்போல் கதைகளும், கட்டுரைகளும், கற்பனைகளும் ஆக்குவிப்பதற்கு உறு துணையாக இருந்தது. இளவயதில் அவர் காட்டிய ஆர்வமும், ஆவலும், ஆழ்ந்த ஆராய்ச்சியும் பிற்காலத்தில் அவரைப் பெரும் அறிஞராக்கி விட்டன.

இளமையில் அவருக்கு ஏற்பட்ட எழுத்து வன்மைக்கு 1852ஆம் ஆண்டில் அவர் எழுதிய குழந்தைப் பருவம் (Childhood) என்ற நூலே நல்ல சான்ருகும். முதன் முதலாக அவர் எழுதிய நூல் இதுவே. இந்நூல் பல கட்டுரைகளைக் கொண்டது. தலைநகரத்திலிருந்த ஒரு பத்திரிகை வாயிலாக இந்நூலைத் தால்ஸ்தாய் வெளியிட்டார். முதன் முதலில் எழுதிய இந்நூலுக்கு யாதொரு பண வுதவியும் கிடைக்கவில்லை.

இக்கட்டுரைகளெல்லாம் அடுத்தடுத்துப் பத்திரிகையில் தொடர்ந்து வெளிவந்ததால், தால்ஸ்தாய்க்குப்

புதிய ஊக்கமும், சுறுசுறுப்பும் ஏற்பட்டன. அதனுல் அவர் தொடர்ந்து மேலும் இரண்டு நூல்கள் எழுதி யனுப்பினுர். அவைகள் முறையே, 'நிலச் சொந்தக் காரர்களின் காலை நேரம்,' (The Landlord's Morning) இளமையும் வாலிபமும்,' என்பனவாம்.

லியோ தால்ஸ்தாய் காகசசில் இருக்கும் பொழுது தான் கிரிமியப் போர் தொடங்கிற்று. 1854 ஆம் ஆண்டு இங்கிலாந்து, பிரான்சு, துருக்கி ஆகிய மூன்று நாட்டினர் ஒரு பக்கமாகவும்,இரஷிய நாட்டினர் மற்ருெரு பக்கமாகவும் நின்று பெரும் போர் துவக் கினர். இப்போர் கிரிமியா என்னும் தீபகற்பத்தில் நடந்தது.

அப்பொழுது இரஷிய மன்னர் முதலாம் நிக்கொலஸ் என்பவர் தன்னலம் பிடித்து, துருக்கியைத் தன் வெறிப் பிடியில் வைத்து அந்த நாட்டை ஆட்டிப் படைக்க வேண்டுமென்று விரும்பி, போர் முழக்கஞ் செய்தார். ஆனுல் எதற்கும் அவர் துருக்கியின் அக்காலத்துத் தலைநகரான கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றத் துணிந்தாரில்லை. அதற்குமாருக, மற்றக் கருங்கடற் பிரதேசங்களைக் கைப்பற்ற எண்ணினுர். ஆனுல் ஆங்கிலே யர்களும் அவர்களுடைய நண்பர்களும் இரஷியாவின் ஆதிக்கத்திற்குத் தடையாக இருந்து, எந்த நிலையிலும் துருக்கியின் எல்லைகளைக் காப்பாற்ற உறுதியளித்தனர். இரஷியாவின் கொடிய போருக்கு ஆங்கிலேயர்கள் தீவிரமாக எதிர்ப்புக் காட்டி, துருக்கியைக் காக்க ஒன்று திரண்டனர். இங்கிலாந்தின் தலைமையில் பிரான்சும், ஆஸ்திரியாவும், மற்ற நேச நாடுகளும் இரஷியர்களுக்கு எதிராக, கிரிமியாவில் போர் தொடுத்தன. 1854-ஆம்

நிக்கொலஸ் மன்னர் தால்ஸ்தாயைப் போன்ற சிந்தனையாளர் போர்க்களத்தில் தம் காலத்தை வீணுக்குவதனுல் யாதொரு நன்மையும் ஏற்படாது என்று கருதி அவரை ஆபத்தில்லாத மற்ருேரிடத்திற்கு அனுப்பி விட்டார். அதனுல் தால்ஸ்தாய் கடைசி வரையில் செவஸ்தொபோலிருந்த இரஷியப் போர் வீரர்களுடன் இருந்து அவர்களது அனுபவங்களில் பங்கு கொள்ள முடியாமற் போயிற்று. தால்ஸ்தாய் நிக்கொலஸ் மன்னரின் மனத்தைக் கவர்ந்தது அவர் எழுதிய 'செவெஸ்தொபோல் கதைகள்,' என்று அப்பொழுது வெளிவந்த கதைகளினுலேயாகும். குண்டு வீச்சுக்களுக்கிடையே தம் தோழர்களுக்கு அவர் கூறிய விறுவிறுப்பான கதைகளை அனைவரும் படித்து அவரது வீரத்தையும் எழுத்து வன்மையையும் பாராட்டினர்.

இரஷியப் படையில் தால்ஸ்தாய் இருக்கும் பொழுதே வேறு சில நூல்களையும் எழுதி வெளியிட்டார். அவைகளில் குறிப்பிடத்தக்கவை, 'காஸக்ஸ்' (Cossacks), 'இரண்டு வீரர்கள்,' 'லூஸெர்ன்' முதலியவை. இம்மூன்று நூல்களும் 1854-ஆம் ஆண்டு முதல் 1857-ஆம் ஆண்டுவரை தொடர்ந்து எழுதப்பட்டவை. இந்நூல்கள் வாயிலாகத் தால்ஸ்தாய் தம் உள்ளத்தில் ஊடுருவி நின்ற உணர்ச்சிகளுக்கு உருவம் கொடுத்துப் படிப்பவர்களுக்கு மகிழ்ச்சி யூட்டினுர். பொதுவாக இந்நூல்கள் போர்வீரர்களின் வாழ்க்கையைப் பற்றியும், அவர்கள் பின்பற்ற வேண்டிய ஒழுங்கு முறைகளைப் பற்றியும், போர்ப் பயிற்சிகளைப் பற்றியும் கூறுகின்றன. இந்நூல்களை நன்கு ஆராய்ந்து பார்த்தால், தால்ஸ்தாயின் வாழ்க்கை வரலாறும் இவற்றில் சேர்ந்திருப்பதைக் காணலாம்.

கிரிமியப் போருக்குப் பின்னர் தால்ஸ்தாய் இராணுவத்தில் வெகு நாட்கள் பணிபுரியவில்லை. மீண்டும் அவருக்கு மனக்குழப்பம் உண்டாயிற்று. போரில் ஆயிரக் கணக்கான வீரர்கள் இறந்ததையும், அதற்குமேல் பல மடங்கு காயமடைந்து கிடந்ததையும் அவர் எண்ணிப் பார்த்தார். போர் கொர்டிது, கொடிது; அதை ந எப்படியாவது ஒழிக்கவேண்டும் என்று திண்ண எண்ணினர். அதே சமயத்தில் இரஷியாவில் பெருஞ் செல்வர்களும் பிரபுக்களும் ஆடம்பரமாக வாழ்ந்து வந்த வாழ்க்கையை அடியோடு வெறுத்தார்; இரஷிய சமுதாயத்தில் இருந்த சிற்சில கொடிய பழக்கவழக்கங்களைக் கண்டு மனம் பதைத்தார். கடவுளுக்கு விருப்பமான தூய வழியிலேயே அவர் வாழ விரும்பினர். இறுதியில் இராணுவத்திலிருந்து ஒய்வுபெற அவர் முடிவு செய்தார். அதனல் கிரிமியப் போர் முடிந்த சில நாட்களுக்குள் அவர் ஒய்வெடுத்துக்கொண்டு தமது நாட்டின் நிலையைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து, மக்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபட முடிவு செய்தார்; அதே நோக்கத்துடன் பல நூல்களையும் மேலும் மேலும் எழுதத் தொடங்கினர். 1857 ஆம் ஆண்டு அவர் இறுதியாக இரஷியப் படையிலிருந்து விலகிக் கொண்டார்.

# 6. செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கில் தால்ஸ்தாய்

படையிலிருந்து இறுதியாக விலகுவதற்கு முன்பே தால்ஸ்தாய் கிரிமியாவை விட்டு மற்ருேரிடத்திற்கு வந்து ஓய்வெடுத்துக்கொண்டு புதிய நூல்கள் எழுதும் பணியில் ஈடுபட்டார்; உலகில் பிறந்த மக்கள் யாவரும் மக்களாக மதிக்கப்பட வேண்டுமென்று விரும்பி அதற்குத் தேவையான வழிவகைகளேக்கண்டறிய விரும்பினுர். அப்பொழுது இருந்த இரஷிய மக்களுக்கு உள்ளதைச் சொன்ஞல் அவர்கள் உறுமத் தொடங்கினர். அதனுல் தால்ஸ்தாய் ஆக்க வேலேயில் ஊக்கங்கொண்டு தலே நகரான செயின்ட் பீட்டர்ஸ்பர்க்குக்குச் சென்ருர்.

லியோ தால்ஸ்தாயை அப்பெரு நகரம் நன்ருக அறியும். அந்நகரத்து மக்கள் அனேவரும் அவருடைய வீராவேசக் கதைகளேயும் கட்டுரைகளேயும் படித்து மகிழ்ந்திருந்தனர். தர்ல்ஸ்தாயின் திறத்தை அனே வரும் மெச்சி அவரைப் பாராட்டினர்.

சிறந்த பணியாற்றிய லியோ தால்ஸ்தாய் மீண்டும் செயின்ட் பீட்டர்ஸ்பர்க்குக்குச் சென்றபோது அந்

நகரத்தின் அறிஞர்கள் பலர் அவரை இன்புடன் வரவேற்றனர். அக்காலத்தில் அந்த நகரம் ஒரு கலைக் கூடமாகவும் அறிஞர் பலருடைய உறைவிடமாகவும் விளங்கியது. புகழ்மிக்க உருஷியக் கவிஞர்களும், பெருங்கதை எழுத்தாளர்களும், நாடகாசிரியர்களும் அங்கு வாழ்ந்து வந்தனர். அவர்கள் தம் சமகாலத்தவர் என்ற காரணத்தால் தால்ஸ்தாய் அகமகிழ்ந்திருந்தார். அவர்களோடு அந்நகரத்தில் வசிக்கின்ற வாய்ப்பைப் பெறுதற்கரிய பேருகக் கருதினர். உலக இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்ற ஷெகாவ் (Chekhov), புகழ்மிக்க உருஷியக் கவிஞர் லெர்மாந்தோவ், உரைநடை இலக்கியத்தில் தலைசிறந்த எழுத்தாளர் துர்கினீவ் போன்ற அறிஞர்கள் அங்கு வாழ்ந்தனர். லெர்மாந்தோவ் எழுதிய அரிய நூல்களைத் தால்ஸ்தாய் முன்னரே படித்து இன்புற்றவர். லெர்மாந்தோவும், புஷ்கினும் தமது பிள்ளைப் பருவத்திலிருந்தே பீட்டர்ஸ்பர்க்கில் இணைபிரியாத தோழர்களாக வளர்ந்தவர்கள். லெர்மாந்தோவ் எழுதிய நூல்களையும் தால்ஸ்தாய் எழுதிய நூல்களையும் படிப்போமாயின் அவ்விரு அறிஞர்களுக்குள்ள கருத்தொருமையை நன்கு உணரலாம். பீட்டர்ஸ்பர்க் நகர இலக்கிய வல்லுநர்களில் தலைசிறந்தவராக விளங்கிய ஐவன் துர்கினீவ் புகழ்மிக்க நாவலாசிரியர். அவர் தால்ஸ்தாயைவிட ஆண்டிலும் அனுபவத்திலும் பெரியவர்; அரிய பல நூல்களை வெளியிட்டுப் புகழ் பெற்றவர். அவருக்கும் தார்ல்ஸ்தாய்க்கும் பலவகைகளில் நெருங்கிய ஒற்றுமை காணப்பட்டது. துர்கினீவ்எழுதிய சிறந்த நூல்களில் 'தந்தையரும் புதல்வரும்', (Fathers and Sons) 'வேட்டைக்காரன் வரலாறு (A Hunter's Skteches), 'மும்மு' (Mummu) என்பன குறிப்பிடத்தக்கவை. துர்கினீவும் தால்ஸ்தாயும் உருஷிய

சமுதாயத்திலிருந்த பெருங் குறைகளைப் போக்குவதற்கு அரும்பாடுபட்டனர். நாட்டில் பேரின்ப வாழ்வில் பொழுதுபோக்கும் பண்ணை முதலாளிகளின் வாழ்வையும், வறுமையால் வாடித் துன்பமடைந்துள்ள அடிமை உழவர்களின் வாழ்க்கைத் தரத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து மனம் வருந்திய அவர்கள், உழவர்களின் அடிமைத் தளையைப் போக்கி அவர்களுக்கு வேண்டிய உரிமைகளை வழங்க விழைந்தனர்; அதற்காக அரசாங் கத்தின் துணையைப் பெறவும் முனைந்தனர். உருஷிய நாட்டு உழவர்களின் அடிமை நிலை நீங்குவதற்கு ஆண்டுகள் பலவாயினும் அதற்கு அடிகோலிய அறிஞர் கள் துர்கினீவும் தால்ஸ்தாயும் என்றால் அது மிகையன்று. தால்ஸ்தாய் செயின்ட்பீட்டர்ஸ்பர்க் நகரத்திற்குச் சென்றசிறிது காலத்திற்குள் துர்கினீவ் அவருடன் நட்புக் கொண்டார். அவரை வரவேற்றுத் தம் இல்லத்திலேயே வசிக்குமாறு கேட்டுக் கொண்டார். துர்கினீவ் எழுதிய நூல்களைத் தால்ஸ்தாய் படித்தார்; தால்ஸ்தாய் எழுதிய நூல்களைத் துர்கினீவ் படித்தார்; நூல்களில் பொதிந் துள்ள கருத்துக்களைப் பற்றித் தமக்குள் ஒருவருக் கொருவர் புகழ்ந்துரைத்து மகிழ்ந்தனர்.

இங்ஙனம் துர்கினீவும் மற்ற அறிஞர்களும் தால்ஸ் தாயுடன் பழகி அவரைப் பாராட்டிப் பேராதரவு காட்டி வரும் நாளில் திடீரென்று துர்கினீவுக்கும் தால்ஸ்தாய்க் கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டு அவர்களுடைய நட்பு முறிந்தது. அதனால் தால்ஸ்தாய் பெருங்கதை ஆசிரியரும் சிறந்த நண்பருமான துர்கினீவின் அன்பையும் ஆதர வையும் இழந்தார். அவ்விருவருடைய நட்பு முறிந்ததைக் குறித்து அவர்களுடைய நண்பர்களும் வாசகர்களும் மிகவும் வருந்தினர்; ஆனால் தால்ஸ்தாய் அதற்காக

வருந்தவில்லை. தமது கொள்கையில் அவர் கொண்டிருந்த உறுதியினுல் ஒரு சிறந்த அறிஞருடைய நட்பையும் இழக்கத் துணிந்தார்; பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் எப்போதும்போலப் பிற நண்பர்களுடன் உல்லாசமாகப் பழகி வந்தார்; கவிஞர்கள், கலைவாணர்கள் ஆகியோரின் மதிப்பிற்குரியவராக இருந்தார்; எதிர்காலக் குடிமக்களாக வரப்போகும் இளைஞர்கள் தமது கொள்கைகளை அறிந்து கொள்ளும் வண்ணம் தமது நூல்களை அவர்களுக்கு இலவசமாக வழங்கி வந்தார். சிறிது காலம் சென்றபின் பீட்டர்ஸ்பர்க் வாழ்க்கையும் அவருக்கு வெறுப்புண்டாக்கியது. அதனுல் அவர் அவ்விடத்தை விட்டு வெளிநாடுகளுக்குச் சென்று, ஆங்காங்கு வாழும் மக்கள் வாழ்க்கை நிலையை அறிந்து கொள்ள விரும்பினுர்.

# 7. வெளிநாட்டுப் பயணம்

கிரிமியப் போருக்குப் பின்னர் இராணுவத்திலிருந்து விலகிய தால்ஸ்தாய் சிறிது காலம் தலைநகரத்தில் தங்கிவிட்டு, 1817ஆம் ஆண்டு முதன் முதலாகத் தமது ஐரோப்பியப் பிரயாணத்தைத் தொடங்கினார். மற்றைய நாடுகளில் மக்கள் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ளவும், ஆட்சி முறைகளில் காணும் நல்லியல்புகள், குற்றங் குறைகள் ஆகியவற்றை அறிந்து கொள்ளவும் வெளிநாட்டுப் பிரயாணத்தை மேற்கொண்டார்.

1857ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அவர் இரஷியாவிலிருந்து புறப்பட்டு முதலில் ஜெர்மனிக்குச் சென்றார். அப்போது ஜெர்மனியில் ஐக்கிய ஆட்சி நிறுவப்படவில்லை. நெடுங்காலமாக ஜெர்மனி பல்வேறு இராச்சியங்களோடு இணைக்கப் பெற்றிருந்தது. பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய இரு நாடுகளுக்கிடையே பொறாமை ஏற்பட்டது. 1861ஆம் ஆண்டு பிஸ்மார்க் என்னும் பிரஷ்ய நாட்டு அரசியலறிஞர் பிரதம அமைச்சராக இருந்து ஜெர்மனியின் ஐக்கியத்தை உருவாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு அதற்குரிய நடவடிக்கைகளையும் எடுத்து வந்தார். டென்மார்க், ஆஸ்திரியா, பிரான்சு

ஆகிய நாடுகளுடன் போர் தொடுத்து ஜெர்மனியின் ஐக்கியத்தைப் பூர்த்தி செய்தார். இரும்பு நெஞ்சம் படைத்த பிஸ்மார்க்கின் ஆட்சியின் தன்மையையும், பிரஷ்ய மக்களின் நாட்டுப் பற்றையும் தால்ஸ்தாய் நேருக்கு நேராகக் கண்டறிந்தார். அக்காலத்தில் பிரஷ்யா, ஆஸ்திரியா முதலிய நாடுகளில் அமுலிலிருந்த கல்வி முறையைத் தால்ஸ்தாய் நன்கு கவனித்தார்.

பின்னர்த் தால்ஸ்தாய் இத்தாலிக்குச் சென்ருர். ஐரோப்பிய நாகரிகத்தின் பிறப்பிடம் (Cradle of European Civilisation) என்று புகழ்பெற்ற இத்தாலி நாட்டின் கல்வி, கலாசாரத்தை நேரில் கண்டறிந் தார். அந்நாட்டில் அவர் பல அறிஞர்களேக் கண்டு அவர்களுடன் அளவளாவி மகிழ்ந்தார். பின்னர்த் தால்ஸ்தாய், பேரறிஞர் ரூஸ்ஸோவின் நாடாகிய பிரான்சுக்குச் சென்ருர்.

தால்ஸ்தாய் பிரான்சுக்குச் சென்ற காலத்தில் மூன்ரும் நெப்போலியன் என்ற மன்னர் ஆட்சி செய்து வந்தார். அவர் நெப்போலியன் போன பார்ட்டைப் போல் ஒரு மாபெரும் போர்வீரர். பிரஷ்யாவின் தலைமையில் எழுச்சி பெற்ற ஜெர்மன் நாடுகள் தமது நாட்டுக்குப் பேராபத்து விளேவிக்குமென அஞ்சி அந்த ஆபத்தைத் தடுப்பதற்கு வேண்டிய திட்டங்களே வகுத்துக்கொண்டிருந்தார். ஜெர்மனிக்கு எதிராகப் பிரெஞ்சியர் போரில் ஆர்வம் மிக்கவர்களாய் இருந் தனர். எங்கும் மக்களின் உணர்ச்சியைத் தால்ஸ்தாய் கண்டு அதிசயித்தார்.

பாரிஸ் நகரத்தில் வாழ்ந்திருந்த சில உருஷ்யர் களுடன் தால்ஸ்தாய் சிறிது காலம் தங்கினர். பாரிஸ்

நகரத்தில் பல அறிஞர்களை அறிமுகஞ்செய்து கொண்டார். வால்தேர், ரூஸ்ஸோ முதலியவர்களினல் ஏற்பட்ட பிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் பிரெஞ்சு மக்களின் நிலையைப் பற்றித் தமது நண்பர்களுடன் ஆராய்ந்தார். புகழ்பெற்ற பிரெஞ்சுப் பத்திரிகைகளில் வெளியாகும் கட்டுரைகளைப் படித்து அக்காலத்துப் பிரெஞ்சு மக்களின் கருத்துக்களைத் தெளிவாகத் தெரிந்து கொண்டார். பிரெஞ்சு மக்களின் குரலே கட்டுரையாக எதிரொலித்தது என்பதை அவர் நன்குணர்ந்தார். அவர் பிரெஞ்சு மொழியில் வல்லுநர். ஆதலால் அவர் எளிதாகப் பிரெஞ்சுப் பத்திரிகைகளைப் படித்துச் செய்திகளை அறிந்து கொண்டார்.

*1830*, *1848* ஆம் ஆண்டுகளில் தோன்றிய பிரெஞ்சுப் புரட்சிகள் இரண்டும் ஐரோப்பிய நாட்டு மக்களுக்கு உற்சாகமும், புத்துணர்வும் ஊட்டியதைத் தால்ஸ்தாய் கண்டறிந்தார். *1830*ஆம் ஆண்டுப் புரட்சி ஸ்பெயின் மக்களின் உரிமை வேட்கையைத் தூண்டியதென்பதையும், அதனல் மன்னரின் அதிகாரங்கள் குறைக்கப்பட்டன என்பதையும் அவர் உணர்ந்தார். ஆஸ்திரியாவிலும் மற்றவிடங்களிலும் மக்களின் உரிமைக் குரல் ஓங்கி நின்றதைத் தால்ஸ்தாய் கண்டார்.

பின்னர்த் தால்ஸ்தாய் பிரான்சிலிருந்து லூஸெர்ன் என்ற இடத்தை அடைந்து அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தார். அக்காலத்தில்தான் அவர் 'லூஸெர்ன்' என்ற நூலை எழுதி வெளியிட்டார். அப்பொழுது தமது உடன்பிறந்தார் நிக்கோலா பாரிஸ் நகரத்தில்

நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாய் இருந்ததைத் தெரிந்து கொண்டு உடனே அவ்விடத்திற்குச் சென்ருர். நோயாளி அதனுல் ஒருவாறு மனம் தேறினுர். ஆனுல் அவருடைய நோய் அவரை விடவில்லை. சில நாட்களுக்குள் நிக்கோலா இறந்துவிட்டார். தம் அருமைச் சகோதரரின் மறைவுக்காகத் தால்ஸ்தாய் மிகவும் வருந்தினுர்.

1860ஆம் ஆண்டு தால்ஸ்தாய் மேலும் சில நூல்களை எழுதி வெளியிட்டார்; 1859ஆம் ஆண்டில் 'மூன்று மரணங்கள்' என்ற நூலையும், மற்றக் கட்டுரைகளையும் வெளியிட்டார்.

தால்ஸ்தாய் மற்ருெருமுறை வெளிநாட்டுப் பிரயாணத்தை மேற்கொண்டார். 1860ஆம் ஆண்டில் அவர் இங்கிலாந்துக்குச் சென்ருர். அப்பொழுது இங்கிலாந்தில் மாபெரும் தொழிற் புரட்சி நடந்து கொண்டிருந்ததை நேரில் கண்டறிந்தார். சிறுசிறு தொழில்களெல்லாம் மாறி, மாபெரும் தொழிற் சாலைகள் அமைக்கப்பட்டுப் பெருவாரியான பொருள்கள் செய்யப்படுவதை அவர் கண்டார். விவசாய முறைகளும் மாறியிருந்தன. ஆக்கப்பொருள்களையும் ஆலைப் பொருள்களையும் உற்பத்தி செய்துகொண்டிருந்ததையும், ஏழை எளியவர்களின் வாழ்க்கை அறவே புறக்கணிக்கப்பட்டிருந்ததையும் அவர் பார்த்து மனம் வருந்தினுர். செல்வர்கள் வாழ்வில் எளிமையைக் கடைப்பிடிக்காது வாழ்ந்ததை அவர் அடியோடு வெறுத்தார். இக்காட்சி அவரைத் துயரக் கடலில் ஆழ்த்தியது.

1857ஆம் ஆண்டு முதல் 1860 ஆம் ஆண்டுவரை தாம் மேற்கொண்ட பிரயாணத்தினுல் தால்ஸ்தாய் பெரும்பாலும் ஏமாற்ற மடைந்தார். ஐரோப்பிய நாகரிகம் அழியக்கூடிய பொருளைத் தேடும் நாகரிக மாகவே அவருக்குத் தோன்றிற்று. அறிவின் வெளிச்சம், ஆன்மபலம் ஆகியவற்றை அவர் பலவிடங்களில் காணுமல் மனவேதனையடைந்தார். அதனுல் அவர் மீண்டும் உருஷ்யா திரும்பியதும், ஆன்மசக்தியின் பெருமையைப் பற்றியும் மக்கள் அறிவுடையராய் அறநெறி கடைப்பிடித்து வாழவேண்டுமென்பதைப் பற்றியும் நவீனங்கள் எழுதத் தொடங்கினுர். 1861ஆம் ஆண்டில் அவர் வெளியிட்ட 'கோல்ஸ்டிமெர்' (Kholstimer) என்ற நூலில் ஈடு எடுப்பற்ற முறையில் ஆடம்பர வாழ்க்கையை வன்மையாகக் கண்டித்து எழுதினுர். வெறும் ஆரவாரம் கூடாது; அமைதி யான எளிய வாழ்க்கையே சாலச் சிறந்தது என்று தமது நூல்வாயிலாக உலகுக்கு எடுத்துக் காட்டினுர்.

பேரறிஞர் லியோ தால்ஸ்தாயின் சீரிய தத்து வத்தின் எதிரொலியே உருஷ்யப் புரட்சிக்கு அடிகோ லிற்று என்று நாம் துணிந்து கூறலாம். 'தூய லட்சியம், தூயமுறை' என்பதே பேரறிஞர் தால்ஸ்தாயின் அடிப்படைத் தத்துவம்.

தம்முடைய பிரயாணங்களினுல் அவருக்குப் பயன் இல்லாமல் போகவில்லை. உலகம் பரந்ததென்றும், உலகத்தில் அநேக இன்னல்களும் நஷ்டமும் அனுபவிக்க வேண்டுமென்றும், அவைகளைக் கண்டு நடுங்கக் கூடா தென்றும், துன்பக் கடலை நீந்தியே இன்பக்கரையைச் சேரவேண்டுமென்றும் தால்ஸ்தாய் உணர்ந்தார். அவர்

தம்முடைய பிரயாண அனுபவத்தினுல் பிற்காலத்தில் சிந்தனைத் திறனும் செயல்வன்மையும் பெருகப் பெற்றுப் பொதுநலப் பணியில் ஆற்றல் மிக்கவரானுர்.

பிரயாணம் செய்வது ஒரு கலை. அக்கலையை எல்லாரும் வளர்க்க இயலாது. அடிக்கடி பிறநாடுகளுக்குப் பிரயாணம் செய்வதனுல் நமக்குப் பரந்த அறிவும் விரிந்த சிந்தையும் ஏற்படுகின்றன; குறுகிய மனப்பான்மையும் வெறுப்பும் மறைகின்றன; உலகம் ஒரே குடும்பம் என்ற சீரிய கொள்கை உள்ளத்தில் மலர்ந்து திண்மையடைகிறது.

# 8. பொதுநலத் தொண்டு

பண்பாடுகளுக்கு உறைவிடமான சான்ருேர் தமக்கு எத்தகைய வாய்ப்புக் கிட்டினும் அது சிறிதோ, பெரிதோ, அவ்வாய்ப்பைப் பிறர் நலத்திற்காகவே பயன்படுத்துவர். லியோ தால்ஸ்தாயும் தமது சீரிய கொள்கைகள் உலக நல்வாழ்விற்கே அடிகோலும் என்று உறுதியாக நம்பி அக்கொள்கைகளைச் செயல் முறையில் விளக்கிக் காட்டி வாழத் தொடங்கினர்.

அவருக்கு வயது முப்பத்துமூன்று அல்லது முப்பத்து நான்குதான் இருக்கும். தமது ஐரோப்பியப் பியாணங் களுக்குப் பின்னர் அவர் வேறு எவ்விடத்திற்கும் செல்லாமல் தமது பிறப்பிடமாகிய யாஸ்நய போல்யாஞவுக்கு நேராகச் சென்ருர். அவ்விடத் திலேயே அவர் பலவாண்டுகள் வாழ்ந்து வந்தார். எண்ணியவர் செயல் ஆற்றுவதில் உறுதியுடையவராக இருக்கப் பெற்ருல் அவர் எண்ணியவற்றை எண்ணிய வாறே செய்து முடிப்பர். தால்ஸ்தாயும் தமது திட் டங்களை வகுத்துச் செயல் ஆற்றுவதில் மனவுறுதி யுடன் ஈடுபடலானுர். அறிவும், அடக்கமும், அருளும் அமையப் பெற்ற தால்ஸ்தாய் அமைதியான பொது நலத் தொண்டில் இறங்கினர். ஆதரவற்றுக் கிடந்த

அடிமைகளுக்குச் செய்யும் பணியே தெய்வப் பணி என்று கருதி அவர்களுடைய விடுதலைக்காகப் பாடுபட லானார். அவர் உருஷ்யாவுக்குத் திரும்புவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னர் நிலத்தில் உழைத்து வந்த அடிமைகளின் விடுதலைக் கிளர்ச்சி நாடெங்கும் தோன் றிற்று. இந்நிலையில் 1855 ஆம் ஆண்டில் பட்டத்திற்கு வந்த இரண்டாம் அலெக்சாந்தர் மன்னரும் இவ்வுரிமைக் கிளர்ச்சிக்குப் பேராதரவு கொடுத்தார். அதனால் அடிமைகள் விடுதலை இயக்கம் வலுப்பெற்றது. செல் வக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும் இவ்விடுதலை இயக்கத்தைத் தீவிரமாக எதிர்த்து வந்தனர். இந்த நிலையில்தான் லியோ தால்ஸ்தாய் அடிமைகளின் துன் பங்களைத் தெற்றென விளக்கும் நூல்களை எழுதி அவ் வியக்கத்திற்கு ஆதரவு அளித்து வந்தார். விவசாயி கள், தொழிலாளிகள் ஆகிய எளிய மக்களின் தாழ்ந்த நிலையை உணர்ந்து அவர்களுக்கு வேண்டிய உதவி களை ஆடம்பரமின்றிச் செய்து வந்தார்.

முதன் முதலில் தால்ஸ்தாய் தமது பண்ணையில் பலவாண்டுகளாக உழைத்து வந்த அடிமைகளுக்கு விடுதலை வழங்கினார். இதற்குள் உருஷ்ய அரசாங்கமே 1861 ஆம் ஆண்டில் அடிமை விடுதலைச் சட்டத்தைப் பிரகடனஞ் செய்தது. இது மிகச் சிறந்த முன்னேற்றச் சட்டம் என்று லியோ தால்ஸ்தாயே பாராட்டினார். சற்றேறக்குறைய அதே காலத்தில் அமெரிக்க ஜனாதி பதி அறிஞர் ஆப்ரகாம் லிங்கனும் பலவிதத்தில் தீங் கிழைக்கப் பெற்ற நீக்ரோக்களுக்கு விடுதலை வழங்கி அழியாப் புகழ் பெற்றார்.

அடிமை விடுதலையை உருஷ்ய அரசாங்கம் பிரகட னஞ் செய்தவுடனே, தூலா மாகாணத்திற்குத் தால்ஸ்



இளமைப் பருவம்—தால்ஸ்தாய்

தாய் தண்டனை அதிகாரியாக நியமிக்கப் பட்டார். எவரேனும் நிலத்தில் வாழ்ந்துவந்த அடிமைகளை விடுவிக்க மறுத்தால் அவ் வழக்கினை விசாரித்துத் தண்டனை கொடுக்கும் அதிகாரம் அவருக்கு அளிக்கப்பட்டது. தால்ஸ்தாய் போன்ற செல்வர் குடியில் பிறந்தவர்கள் அடிமை விடுதலையை ஆதரித்ததால் அடிமை விடுதலை இயக்கம் மிக விரைவில் முன்னேற்றமடைந்தது. தால்ஸ்தாய் மேலும் அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் அல்லும் பகலும் பாடுபட்டு வந்தார். அவர் புகழையோ வசைமாரியையோ பொருட்படுத்தவில்லை. உழவர் சமுதாயத்தைத் திருத்தி அமைக்க வேண்டுமென்பதையே அவர் தமது நோக்கமாகக் கொண்டு உழைத்தார்.

லியோ தால்ஸ்தாய் உழவர்களின் எழுத்தறிவின்மையைப் போக்க அவர்களுடைய கல்வி வளர்ச்சியிலும் நாட்டம் செலுத்தினர். அதற்காக ஓர் இலவசப்பள்ளியைத் தமது பண்ணையிலே நடத்த அரசரை அனுமதி கோரினர். அவ்வாண்டிலேயே எல்லா அடிமை உழவர்களுக்கும் விடுதலை வழங்குமாறு அரசாங்கம் பிரகடனஞ் செய்து விட்டபடியால் பள்ளி வைப்பதற்கு அனுமதி வழங்கப் பட்டது. அழிவில்லாச் செல்வமாகிய கல்விச் செல்வத்தை ஏழை எளியவர்களுக்கு வழங்க அவர் ஒரு பள்ளியைக் கட்டுவித்தார். மாணவ மாணவிகள் எல்லோருக்கும் அவர்கள் விருப்பப்படியே பாடம் கற்பிக்கப் பட்டது.

அறிஞர் ரூஸ்ஸோ கல்வியைப் பற்றி எழுதிய 'எமிலி' என்ற நூலில் குறிப்பிட்டதைப் போல் தாமும் தமது பள்ளியில் மாணவர்களுக்கு எவ்விதமான கட்டுப்

பாடுமில்லாமல் கல்வி கற்பித்தார். பாடங்களும் திட்ட வட்டமாகக் குறிப்பிடப்படவில்லை. தால்ஸ்தாய் அவ்வப் பொழுது விவிலிய நூலையும், இசை, ஓவியம் முதலியவற்றையும் தாமே மாணவர்களுக்குக் கற்பித்து வந்தார். முதன் முதலில் அவருடைய பள்ளியில் பல ஆசிரியர்கள் பணியாற்ற முன்வந்தனர். ஆனால் பிற்காலத்தில் மாணவ மாணவிகள் தங்கள் விருப்பம் போல வாழும் வழக்கம் அவ்வாசிரியர்களுக்குப் பிடிக்க வில்லை. 'எமிலி' என்ற நூலில் மாணவருக்குக் கொடுக்கப்பட்ட உரிமைக்குமேல் தால்ஸ்தாய் தம் மாணவர்களுக்குக் கொடுத்ததாகவே அவர்கள் எண்ணினார்கள். அரசாங்கமும் தால்ஸ்தாயின் பள்ளியைப் பற்றி நல்லெண்ணம் கொள்ளவில்லை. தால்ஸ்தாயின் சீர்திருத்தக் கருத்துக்கள் பலருக்குப் பிடிக்கவில்லை. தத்துவஞானி தால்ஸ்தாய்க்குப் பெரிய ஏமாற்றம் ஏற்பட்டது. மனங்கலந்து நெருங்கிப் பழகக்கூடிய நண்பர்கள் எவரும் அவருக்கு அக்காலத்தில் இல்லை. வேறு வழியில்லாமல் தால்ஸ்தாய் பள்ளிக்கூடத்தை மூடிவிட்டு ஓய்வெடுத்துக் கொண்டார். கல்வியில் அவர் காட்டிய முற்போக்குக் கருத்துக்கள் உருஷ்யர்களைக் கவரவில்லை. ஆனால் தால்ஸ்தாய் தமது சீர்திருத்தக் கருத்துக்களைக் கைவிடவில்லை. மக்கள் சமூகத்தில் உயர்ந்து விளங்குவதே எல்லாவற்றிலும் சிறந்த சீர்திருத்தம் எனக் கருதிய தால்ஸ்தாய், 'யாஸ்நய போல்யானு' என்ற தலைப்புடன் பத்திரிகை ஒன்றைத் துவக்கினார். அப்பத்திரிகையில் வழக்கம்போல் தமது கொள்கைகளை விளக்கிக் கட்டுரைகள் வரைந்தார். இக்கட்டுரைகளைப் படித்த் அரசியல் அதிகாரிகளும் கல்வியதிகாரிகளும் தால்ஸ்தாயின் கருத்துக்களை ஏற்க

மறுத்தனர்; நாட்டுக்கு ஒவ்வாத கருத்துக்களைப் பரப்புவதாகவும் கூறினர். தால்ஸ்தாய் மட்டும் யார் ஆதரித்தாலும் ஆதரிக்காவிட்டாலும் தமது பத்திரிகையைத் தொடர்ந்து சிறிது காலம் நடத்தி வந்தார். பிறகு அப்பத்திரிகை நின்றுவிட்டது.

தால்ஸ்தாய் வாழ்க்கையில் நிம்மதி என்பது ஏற்படவில்லை. அவ்வாறு நிம்மதியற்ற காலத்திலும் அவர் அநேக நூல்களைப் படித்து வந்தார். எந்த நிலையிலும் தால்ஸ்தாய் தம்முடைய மனோதைரியத்தையும், உற்சாகத்தையும் எள்ளளவேனும் இழக்கவில்லை. தாமே சிந்தித்துத் தாமே செயலாற்ற அவர் விரும்பினார். பிறருடைய துணையை அவர் நாடவில்லை.

தால்ஸ்தாயின் உள்ளத்தில் ஏதோ உறுத்திக்கொண்டே இருந்தது. தமது இலட்சியத்தைச் சமுதாயத்தில் நிலவியிருந்த கொள்கைகளோடு எப்படிப் பொருந்தச் செய்வது என்பதே அவரது பெரிய பிரச்சினை. நாளுக்கு நாள் அதனால் அவருக்கு மனவேதனை பெருகிற்று. பிறர் நலம் நாடிய பேரறிஞருக்குப் பெரிய மனக் குழப்பம் உண்டாயிற்று. அவர் தமது கொள்கைகளிலிருந்து சிறிதும் பின்வாங்க விரும்பவில்லை. பொதுநலமே தமது நலமென்று கருதி மேன் மேலும் நூல் எழுதும் ஆக்கப் பணியில் ஈடுபடலானார். இனி வரப்போகும் நூல்களின் வாயிலாகத் தமது வாழ்க்கையின் தத்துவத்தைப் பசு மரத்தாணிபோல் விளக்குவதோடு உருஷ்ய மக்கள் சமுதாயத்தில் காணப்பெற்ற ஊழல்களையும் தீமைகளையும் போக்கத் தம்மாலான முயற்சியைச் செய்து வந்தார். அவர் வாழ்நாளின் பிற்பகுதியில் எழுதி வெளியிட்ட எழுத்தோவியங்கள்

உருஷ்யாவுக்கு மட்டுமேயல்லாது இவ்வுலகமனைத்துக்கும் உரிய ஒப்பற்ற இலக்கிய நூல்களாகத் திகழ்கின்றன.

தீராத மனக்கவலையால் அவர் தேக நிலை சீர் கெட்டது. இருப்பினும் மனிதவர்க்கத்தில் கொண்டிருந்த நம்பிக்கையை அவர் இழக்க வில்லை. தமக்குள் பகுத்தறிவின் ஆற்றல் பெருகப் பெருக அவர் பிறருடைய இன்ப துன்பங்களிலே தமது இன்ப துன்பங்களைக் கண்டு வாழ விரும்பினர்.

# 9. மண வாழ்க்கை

1861ஆம் ஆண்டில் தால்ஸ்தாய் வேலரியா ஆர்ஜினிவ் என்ற பெண்ணை மணந்துகொள்ள விரும்பினர். இருவரும் ஒருவரை யொருவர் நன்கு தெரிந்து கொண்டிருந்த போதிலும் யாது காரணத்தாலோ அவர்களுடைய திருமணம் நடைபெருமல் போயிற்று. அதனல் தால்ஸ்தாய் தம்முடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்ள முடியவில்லை. அடுத்த ஆண்டு தால்ஸ்தாய் சிகிச்சை பெறுவதற்காகச் சமாரா என்ற உல்லாச உறைவிடத்திற்குச் செல்லும் வழியில் மாஸ்கோ மாநகரத்தில் தங்க வேண்டியதாயிற்று. அவர் அந்நகரத்தில் வசித்து வந்த மருத்துவர் பேஹ்ரி என்பவர் இல்லத்தில் சில நாட்கள் தங்கியிருந்தார். அம்மருத்துவருக்குச் சோபி என்பவள் இரண்டாவது மகள். அவளுக்கு அப்பொழுது வயது பதினறு. எனினும் உருவிலும் குணத்திலும் அவள் சிறந்து விளங்கினள். எப்படியாவது அக்கன்னிகையை மணந்து கொள்ள வேண்டுமென விரும்பினர். அதற்கு மருத்துவரின் மனைவியாரும் சம்மதித்தார். தால்ஸ்தாயும் அம்மருத்துவரும் நெருங்கிய நண்பர்களான தால் மருத்துவரின் மனைவியார் தால்ஸ்தாய்க்குத் தம் மகளை மணம் செய்து கொடுக்க ஒப்புக்கொண்டார்.

அவர்களது திருமணம் 1861ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 23ஆம் நாள் மிகச் சிறப்பாக மாஸ்கோவில் நடைபெற்றது. இதற்குள் தால்ஸ்தாய் நன்முகக் குணமடைந்து விட்டார். திருமணம் நடக்கும் பொழுது அவருக்கு முப்பத்து நான்கு வயதாயிற்று.

திருமணத்திற்குப் பிறகு தால்ஸ்தாயின் வாழ்க்கையில் மாறுதல் ஏற்பட்டது. தம் மனைவியுடன் தம் இருப்பிடமாகிய யாஸ்நயபோல்யாஞவுக்குச் சென்று மணவாழ்க்கையைத் தொடங்கினர். தம் மனைவியுடன் இன்பமாய் வாழ்ந்து வரலானர். சோபி அம்மையார் பதின்மூன்று மக்களுக்குத் தாயானர். நல்ல மக்களைப் பெற்றதால் தால்ஸ்தாயும் அவர் மனைவியாரும் இன்பக்கடலில் மூழ்கியிருந்தனர். இருவரும் மக்களின் கல்வியைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து அவர்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தனர். சிறு வயதிலேயே அக்குழந்தைகளெல்லாம் நுண்ணறிவுடையவர்களாக விளங்கினர்.

இரஷ்ய சமுதாய முன்னேற்றத்திற்காகத் தால்ஸ்தாய் மேலும் மேலும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு எழுத்துத் தொண்டில் ஈடுபட்டார். இப்பணியில் சோபி அம்மையாரும் அவருக்கு உதவியும் ஊக்கமும் அளித்து வந்தார். அதனல் தால்ஸதாய் புதிய நூல்களை எழுதும் பணியில் இறங்கினர். கதைகள் மூலமாக நாட்டு மக்களுக்கு நல்லுணர்ச்சி ஊட்டினர். அறியாமையைப் போக்கி சிந்தனை சக்தியை வளர்க்க விரும்பினர். முயற்சி திருவினையாக்குமன்றே? வினையாண்மையில் மிக்குயர்ந்த தால்ஸ்தாயை நோக்கி வருவாயும் குவிந்தது. தன்மேற் பெய்த மழையை மலை தனக்குள்ளே நிறுத்திக் கொள்ளாதன்றே? அது

போன்று தால்ஸ்தாயும் தமக்குப் பெருகி வளர்ந்த செல்வத்தை ஏழை எளியவர்களுக்கு அளித்து மகிழ்ந்தார்.

செல்வம் மேலும் மேலும் அவரைத் தேடி வந்தது போல் புகழும் அவரைத் தேடி வந்தது. அவரை அறியாதவர் எவருமில்லை. அவரைப்பற்றிப் புகழ்ந்து பேசாதவர் மிகச் சிலரே. அவருடைய புகழ் வளர்மதி போல் வளர்ந்தது. தால்ஸ்தாய் அயராது உழைத்தார். நூல்களை எழுதினர். தமது திருமணத்திற்குப் பின் எழுதிய நூல்களில் இரண்டைச் சிறப்பாக அவர் குறிப்பிடுகிருர்; அவைகளில் ஒன்று 'போரும் அமைதியும்' (War and Peace); மற்ருென்று உலகப் புகழ் பெற்ற பெருங்கதை 'அன்ஞகரினிஞ' என்பதாகும். முதலில் கூறப்பட்ட 'போரும் அமைதியும்' என்ற நூல் 1864ஆம் ஆண்டு முடிக்கப்பட்டது. மக்கள் வாழ்க்கையின் பெருநிகழ்ச்சியாக விளங்கும் போரினுல் ஏற்படும் கொடுமைகளையும் நஷ்டத்தையும் தமது நூலில் தால்ஸ்தாய் தெள்ளத் தெளிய எடுத்துக்காட்டுகிருர். போரை ஒழிக்க வேண்டிய அவசியத்தையும் வற்புறுத்து கிருர். போர் நிகழ்ச்சிகளைத் தால்ஸ்தாயைப் போல் ஆராய்ந்து எழுதியவர்கள் மிகச் சிலரே. போரினுல் விளைந்துள்ள தீமைகளைக் காட்டிலும் அமைதியால் விளைந்த நன்மைகளே மிகுதி எனத் தால்ஸ்தாய் தமது நூலில் சுட்டிக் காட்டுகிருர்.

இரண்டாவதாகக் கூறப்பட்ட 'அன்ஞகரினிஞ' என்ற பெருங்கதை உருஷ்ய சமுகத்தைத் திருத்தி யமைக்கும் நோக்கத்தோடு எழுதப்பட்டதாகும். செல்வக் குடும்பங்களில் நடக்கும் ஊழல்களைப் படம்

பிடித்துக் காட்டுவதுபோல் எழுதப்பட்டுள்ளது. பணக்காரக் குடும்பத்தில் பிறந்த சீமாட்டி தன் கணவனுல் புறக்கணிக்கப்பட்டுச் சீரழிந்து இறுதியில் ஏமாற்றத்தால் தற்கொலை செய்து கொள்வது இப்பெருங்கதையின் சுருக்கமாகும். இந்நூல் 1873ஆம் ஆண்டில் துவக்கப்பட்டு 1877ஆம் ஆண்டு முடிக்கப் பட்டது; முதன் முதலில் தொடர்கதையாகவே வெளியிடப்பட்டது.

தால்ஸ்தாயின் இன்பம் நிறைந்த மணவாழ்க்கையில் திடீரென்று துன்பம் அடி வைக்கத் தொடங்கியது. 1873ஆம் ஆண்டு தால்ஸ்தாயின் பிள்ளைகளில் இருவர் இறந்து விட்டனர். இதே சமயத்தில் நாடெங்கும் கொடிய பஞ்சம் ஒன்று ஏற்பட்டு மக்களுக்குத் துன்பம் விளைத்தது. பஞ்ச காலத்தில் தமக்கு ஏற்பட்ட இன்னல்களைக் கவனிக்காமல் பொது மக்களுக்கும் எளியவர்களுக்கும் தால்ஸ்தாய் தம்மாலான உதவிகளைச் செய்து வந்தார். அவர் பிறர்க்குதவும் நல்லியல்பைப் பொதுமக்கள் கண்டு அவரைப் போற்றிப் புகழ்ந்தனர். ஓர் அவதார புருஷராக அவரைக் கருதினர். 1862ஆம் ஆண்டு முதல் 1867ஆம் ஆண்டு வரை தால்ஸ்தாய் பெரும்பாலும் பொதுத் தொண்டில் ஈடுபட்டிருந் தார்.

# 10. ஞானோதயமும் புதிய பாதையும்

கி. பி. 1876ஆம் ஆண்டுக்குப் பின்னர் தால்ஸ்தாயின் கொள்கையிலும் கருத்துக்களிலும் மாபெரும் மாறுதல் ஏற்பட்டது. பல சோதனைகளுக்குப் பிறகு தால்ஸ்தாய் புதியதொரு வாழ்க்கையை மேற்கொண்டார். உலகினிடமும் உலக வாழ்வினிடமும் வெறுப்புக் கொள்வதே மெய்யறிவைப் பெருக்குவதன் முதற்படி. தால்ஸ்தாய் தமது இளமைப் பருவத்தில் கடவுளைப் பற்றியும், சமய ஒழுக்கத்தைப் பற்றியும் கொண்ட கருத்துக்களைப் பற்றிப் பிற்காலத்தில் பல ஐயங்கள் தோன்றி அவரது உள்ளத்தைக் குழப்பின. இயேசுநாதர் போதித்த கொள்கைகளுக்கும் கிறித்தவ மதத்தில் அப்பொழுது நிலவியிருந்த கருத்துக்களுக்கும் கோட்பாடுகளுக்கும் மாபெரும் வேற்றுமை இருந்தது. மத போதகர்கள் உண்மைப் பொருளை உணராமல் ஏதேதோ பேசிவருவதாகத் தால்ஸ்தாய் கருதினர். ஒவ்வொரு கிறித்தவரும் இயேசுநாதரின் கட்டளைப்படி தம் கடமையைச் செய்தால் உயர்ந்த நிலை அடைய முடியுமென்று தால்ஸ்தாய் திண்ணமாக நம்பினர்.



தூய வாழ்வு நடத்த விரும்புவோர், ''இது செய்ய வேண்டும்; இப்படி நடக்க வேண்டும்,'' என்று கூறுவதைக் காட்டிலும் இயேசுநாதர் காட்டிய வாழ்க்கை வழியில் நடக்க வேண்டுமென்று அவர் வற்புறுத்தினர். தால்ஸ்தாய் தம்முடைய புதிய கருத்துக்களைச் செயல் முறையில் கடைப்பிடித்ததோடு கதைகள் மூலமாகவும் கட்டுரைகளினாலும் உலகத்துக்கு விளக்கிக் காட்டினர்; அளவற்ற உடல் வன்மையும் உள்ளத்தின் உறுதியும் மக்கள் பெற வேண்டுமென வற்புறுத்தினர்; பொதுநலத் தொண்டிற்கு அவை இன்றியமையாதவை என்று கருதினர். அவரும் தம் வாழ்நாட்களைப் பிறர் நலத்திற்கென்றே செலவிட்டார். தீமையின் துணை கொண்டு உலகில் உள்ள தீங்குகளை அகற்ற இயலாதென்றும், நலத்தின் துணை கொண்டே அவைகளைப் போக்க வேண்டுமென்றும் அவர் அனைவருக்கும் அறிவுரை கூறினர்.

புதிய ஏற்பாட்டில் ''தீமையை எதிர்த்து நிற்க வேண்டாம்; ஒருவன் தன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் கொடு'', என்ற இயேசுவின் அருள் வாக்கே தால்ஸ்தாய் தத்துவத்தின் அடிப்படையாகும். இவ்வகையில் இயேசுநாதர் காட்டிய உண்மை நெறி என்று புதியதொரு சமயத்தை உருவாக்கினர்.

''அறிவை மயக்கும் மது முதலியவற்றை அறவே நீக்குதல் வேண்டும்; திரிகரண சுத்தியுடையவராக இருத்தல் வேண்டும்; பொய், பொறாமை முதலிய இழி குணங்களை ஒழிக்க வேண்டும்; ஆடம்பரம், பகட்டு ஆகியவற்றை அடியோடு வெறுக்க வேண்டும்.

மன்னிக்கும் மனப்பான்மையுடையவனே மனிதன்; அவ்வியல்பு பெற்றவர்களே உண்மையான கிறித்து வர்கள்'' என்று அவர் போதித்தார்.

இத்தகைய சன்மார்க்கத்தை லியோ தால்ஸ்தாய் தம் புத்தகங்கள் வாயிலாகப் பரப்பினுர். ''ஐவன் இல்யிச்'', ''தலைவரும் மனிதனும்'' என்ற தால்ஸ்தாயின் நூல்களில் அவருடைய ஞானேதயத்தைப் பற்றியும், புதிதாக அவர் மேற்கொண்ட சமயநெறியைப் பற்றியும் தெளிவாகத் தெரிந்து கொள்கிருேம். அவர் மக்களின் மடமையையும் மூடப் பழக்க வழக்கங்களையும் போக்கு வதற்கு முனைந்தார்; சீர்திருத்தமே தமது நோக்கம் என்றும், ஆராய்ச்சியே உயிரென்றும் கூறினுர்; இயேசு நாதரைப் போல் அனைவரும் பொதுநல வீரராய், சுயநல மில்லாத சுத்த தியாகிகளாய், மக்களின் துன்பங்களைப் போக்கி, நாட்டுக்கு நற்றெண்டாற்றி, பண்புடைய வராய் வாழவேண்டுமென்று ஓயாது சொல்லி வந்தார்.

'ஐவன் இல்யிச்', 'தலைவரும் மனிதனும்' முதலிய நூல்கள் வெளிவந்த சில நாட்களுக்குள் தால்ஸ்தாய் மாஸ்கோ நகரத்திற்குச் செல்ல வேண்டியதாயிற்று. அப்பெரு நகரத்தில் ஏழை எளியவர்கள் வாழ்ந்து வந்த நிலையை நேரில் கண்டு மனம் நொந்தார். உருஷ்ய நாட்டின் பெருமையைக் கெடுத்தது அங்கு மலிந்திருந்த சமூகச் சீர்கேடுகளே என்பதை அவர் நேரில் கண்டு உணர்ந்தார். பழக்கம், அறியாமை ஆகியவற்றுல் சமூகத்தில் ஏற்படும் சீர்கேடுகளைக் களையாமற் போனுல் உருஷ்ய நாடு நாளடைவில் நலிவுற்றுப் பிற்போக் கடையும் என்பதைத் தெரிந்து கொண்டு நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபட உறுதி பூண்டார்.

மக்களின் நல்வாழ்விற்கு விடுதலையும் பொருளாதார முன்னேற்றமும் எவ்வளவு அவசியமோ அவ்வளவு சமூக முன்னேற்றமும் அவசியமாகும் என்பதை வலியுறுத்தினர். இங்ஙனம் தால்ஸ்தாய் சமயத்துறையில் புதுமையை உருவாக்கியதுபோல் சமூகச் சீர்கேடுகளை ஒழித்துப் புதியதொரு சமூகத்தை உருவாக்க விரும்பினர். நாட்டுப்பற்றுக் கொண்ட மக்கள் அனைவரையும் இப் பணியில் ஈடுபடுத்தலானர்.

கி. பி. *1884*-ஆம் ஆண்டு முதல் தால்ஸ்தாயின் சீர்திருத்தக் கருத்துக்களை ஏற்றுக்கொண்டு அவருடன் ஒத்துழைக்க அறிஞர் பலர் முன் வந்தனர். அவர்களில் குறிப்பிடத் தக்கவர் புகழ்மிக்க பேரறிஞரும் எழுத்தாளருமான ஷெக்கோவ் என்பவராவார். இவர் தால்ஸ்தாயுடன் நெருங்கிப் பழகி, தால்ஸ்தாயின் தத்துவத்தை விளக்கும் பணியில் பெரிதும் ஈடுபட்டு வந்தார்.

தம் மனக் கருத்திற்கேற்பக் கிறித்தவ மதம் அமைய வேண்டும் என்று விரும்பிய தால்ஸ்தாயைப் பலர் தீவிர வாதி மார்க்ஸ் (Marx) என்பவர் கருத்தைப் பின்பற்றுபவர் என்று குற்றஞ் சாட்டினர்; தால்ஸ்தாய்க்கு முன் வாழ்ந்த மைக்கல் பக்குனின் (Michael Bakunin) என்ற தீவிரவாதியுடன் தால்ஸ்தாயை ஒப்பிட்டுக் கூறினர்.

நாட்கள் செல்லச் செல்ல அவரைச் சுற்றிலும் அவருடைய குடும்பத்தாரும், நண்பர்களும், சீடர்களும் இருந்தனர். தால்ஸ்தாய் தமது தத்துவத்சில் சிறிதும் விட்டுக் கொடுக்காமல் வாழ்வில் நிறைவு கண்ட பெருமிதம் கொண்டவராய் விளங்கினர். தாம் கூறுவன

வற்றை எண்ணிப் பார்த்துத் தமது உள்ளத்தில் எழுகின்ற எண்ணற்ற சிறந்த கருத்துக்களையே தாம் அறிந்து கூறுவதாகவும் பிறர்க்கு எடுத்துரைத்து வந்தார். அவர் எவ்வளவோ சொல்லியும் எழுதியும் பலர் அவருடன் முரண்பட்டனர். எப்பொழுதும் போல் அவர்மீது குற்றஞ்சாட்டி வந்தனர்.

# 11. இறுதி நாட்கள்

தால்ஸ்தாயின் இறுதிக்காலத்தில் அவரது தத்துவம் பல விடங்களில் வேரூன்றியது. உருஷ்யக் குடியான வர்கள் நல்வாழ்வு பெறவும், அகிம்சை முறையை மேற் கொள்ளவும், தாழ்த்தப் பட்டவரை உயர்த்தவும், உழைப்புக்கு மதிப்புக் கொடுக்கவும் அவர் அரும்பாடு பட்டார். புதிய வாழ்க்கையை மேற்கொண்ட தால்ஸ்தாய் அதற்கு ஏற்றவாறு தமது வாழ்க்கை வழியையும் அமைத்துக் கொண்டார். ஓர் உழவனைப் போல்தாமும் எளிய உடையை அணிந்துகொண்டு, காலை நேரங்களில் வயல்களுக்குச் சென்று, உழவர்களுடன் சேர்ந்து அவர்களுக்கு வேண்டிய உதவிகள் அனைத்தையும் செய்து வந்தார். உழவர்களோடு நெருங்கிப் பழகினார். செருப்புத் தைக்கும் தொழிலையும் முதன் முதலாக அவர் கற்றுக் கொண்டு மற்றைய பண்ணை வாசிகளுடன் சேர்ந்து தாமும் செருப்புத் தைத்தார். எஞ்சிய நேரத்தில் சிறுவர்களுக்குக் கல்வி கற்பித்து வந்தார்.

அப்பொழுது தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களின் உரிமைகளுக்காகப் பாடுபட்டு வந்த காந்திப் பெரியாரும்

லியோ தால்ஸ்தாயின் நூல்களைப் படித்து அவரது கொள்கைகளில் சிறந்தவற்றைப் பின் பற்றலானார். காந்தியார் 'தால்ஸ்தாய் பண்ணை' என்ற பண்ணையை நிறுவினார். பேரறிஞர் தால்ஸ்தாயின் பெயரை அதற்குச் சூட்டியதிலிருந்து தால்ஸ்தாயின் தத்துவம் எவ்வளவு ஆழமாக அவரது உள்ளத்தில் படிந்திருந்தது என்று தெரிந்து கொள்ளலாம்.

லியோ தால்ஸ்தாய் தமது தத்துவத்திற்கேற்ப உணவு, உடை முதலியவற்றிலும் புதிய முறைகளை மேற்கொண்டார். மக்களில் ஒவ்வொருவரும் தம் உணவைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினார். ஊன் உணவை ஒழித்து மரக்கறி உணவையே மேற்கொண்டார். மதுபானம் செய்யக் கூடாதென்று அறிவுரை புகன்றார்.

தம் இறுதி நாட்களில் தால்ஸ்தாய் பற்றற்ற துறவியைப் போல் வாழ்ந்து வந்தார். ஐம்பொறிகளை யடக்கித் தூய வாழ்க்கையை மேற்கொண்டார். எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டு ஒழுகலானார். 'சத்தியாக்கிரகம்' என்ற உயரிய விரதத்தை மேற்கொண்டு வாழ்ந்து வந்தார். இதனால் அவருடைய மனவுறுதியும் நன்கு வெளிப்பட்டது. இது யாவருக்கும் அமைதல் அருமை. இங்ஙனம் மக்களையெல்லாம் நல்வழியில் செலுத்துவதிலேயே அவர் கண்ணுங் கருத்துமாக இருந்தார்.

வாழ்க்கையின் இறுதியில் தால்ஸ்தாய்க்கும் அவர் குடும்பத்தாருக்குமிடையே மனக்கசப்பும், அதனால் வெறுப்பும் ஏற்பட்டன. குடிசை அமைத்து அதில் எளிய வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது

தால்ஸ்தாயின் எண்ணம். அர்த்தமற்ற சமயச் சடங்குகளைக் கைவிட்டு அறிவுப் பாதையைப் பின்பற்றி வாழ வேண்டுமென்று அவர் விரும்பினர். ஆனல் அவருடைய மனைவியாரும் மக்களும் அவரது தத்துவத்தையும் கொள்கைகளையும் ஏற்கத் தயாராக இல்லை.

1880ஆம் ஆண்டுக்குப் பின்னர் தால்ஸ்தாயின் தத்துவமும் புதிய கொள்கைகளும் சிறு சிறு கதைகள் மூலமாகவும், பெருங்கதைகள் மூலமாகவும் வெளிவரத் தொடங்கின. இத்தகைய நூல்களிற் சிலவற்றைப் பற்றி நாம் முன்பே அறிந்தோம். மற்றும் சில நூல்களைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். பிற்காலத்தில் வந்த நூல்களில் அழியாப் புகழ் பெற்று விளங்குவது அவரது 'உயிர்த்தெழுதல்' (Resurrection) என்ற ஒப்புயர் வற்ற சீர்திருத்தக் கதையாகும். இச்சிறந்த நூல் 1900இல் வெளிவந்து சமூகத்தில் ஒரு பரபரப்பை மூட்டியது.

பொருளாதார, சமூக வேற்றுமைகளில் ஏற்படும் துன்பங்களைப் போக்கும் வண்ணம் லியோ தால்ஸ்தாய் உலக சகோதரத்துவத்தை வற்புறுத்தி, அத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட சிறு கதைகளை எழுதி வந்தார். உலக மக்களிடத்து உள்ள அன்பும், உலகப் பணி செய்வதில் உள்ள ஆர்வமும், அவருடைய பரந்த நோக்கமும் இதற்குக் காரணமாகும்.

தால்ஸ்தாயின் தத்துவத்தின்படி உலகில் வாழும் அனைவரும் கடவுளால் படைக்கப்பெற்ற ஒரு பெரும் சமூகத்தைச் சேர்ந்தவர் ஆவர். மக்கள் அனைவரும் மானிடச் சமுதாயத்தைச் சார்ந்தவரே யாவர்.

''யாதும் ஊரே, யாவரும் கேளிர்,' 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' 'ஆருயிர்கட்கெல்லாம் அன்பு செய்தல் வேண்டும்' என்பன போன்ற சீரிய கருத்துக் களின் சாரமாக அமைந்த அவரது தத்துவம் உலக அமைதிக்கு அரண் செய்வதாகும்.

தால்ஸ்தாய் கொள்கைகளுக்கு அவர் மனேவியாரும் மக்களும் இணங்கிவர மறுத்ததால் குடும்பத்தில் பிணக்குகள் பெருகின. இரண்டாயிரம் கி. மீட்டருக்கு மேற்பட்ட நிலங்களை ஏழைகளின் நன்மைக்காக எழுதி வைக்கத் தால்ஸ்தாய் விரும்பினர். அதனல் குடும்பத் தில் மனவருத்தம் ஏற்பட்டதால் தால்ஸ்தாய்க்குத் தொல்லைகள் உண்டாயின. தால்ஸ்தாய் தம் சொத்துக்கள் அனைத்தையும் நூல்களின் பதிப்புரிமை களையும் தம் மனேவியாருக்கு எழுதிவைத்துவிட்டு முற்றும் துறந்த முனிவரானர். நாளுக்கு நாள் அவருக்கும் அவர் மனேவியாருக்குமிடையே கருத்து வேற்றுமை அதிகமாயிற்று.

அதே சமயத்தில் உருஷ்ய அரசாங்கம் தால்ஸ் தாயின் புரட்சிக் கருத்துக்களை வெறுத்தது. அகிம்சை முறையில் அவர் பொருளாதார முன்னேற்றத்திற்குச் சோதனைகள் செய்து கொண்டிருந்ததைக் கண்டு அஞ்சியது. கிராமத்தில் உள்ள மக்களுக்கு உண்மை யான பொருளாதார முன்னேற்றம் கிடைக்கவில்லை என்று தால்ஸ்தாய் எழுதிவந்ததை அடியோடு கண்டித்து வந்தது. சமயத்துறையிலும் வெறுப்பு ஏற்பட்டது. அதனல் தால்ஸ்தாய் எழுதிய நூல்களிற் சில வெளியிடப்படாமலே நின்று விட்டன. நிலங்களை உழவர்களுக்கு நியாயமான முறையில் பங்கிட்டுக்

கொடுக்க வேண்டும் என்று தால்ஸ்தாய் எழுதியதைப் பொதுவுடைமைக் கொள்கையாகக் கருதி அரசாங்கம் அவரது நூல்களுக்குத் தடை விதித்தது.



முற்றும் துறந்த முனிவர்

தால்ஸ்தாயின் இறுதிக்கால வாழ்க்கையின் சிறந்த அம்சம் அவர் காந்தியடிகளுடன் கொண்ட தொடர்பே யாகும். 1906 ஆம் ஆண்டு முதல் 1914 ஆம் ஆண்டுவரை தென்னுப்பிரிக்காவில் தங்கி இந்தியர்களின் நிலேயை உயர்த்த அரும்பாடுபட்ட காந்தியடிகள் ஒரு சமயத்தில் 'நான் இப்பொழுது தனியாக ஓர் அரசியலே உண்டாக்கி னேன் என்ருல் அதற்குரிய பெருமை என் குருநாதன் தால்ஸ்தாயைத்தான் சாரும். அவரால்தான் என்னே இன்று உலகம் பாராட்டுகிறது. அவர் நூல்களேப் படித்துத்தான் நான் இன்று உள்ள நிலேயை அடைந் தேன்,' என்று தால்ஸ்தாயைப் பாராட்டுகிருர்.

தால்ஸ்தாய்க்கும் காந்தியாருக்குமிடையே கடிதப் போக்குவரவு நாளுக்குநாள் அதிகமாகப் பெருகிற்று. 1902 ஆம் ஆண்டு முதல் 1910 ஆம் ஆண்டுவரை தால்ஸ்தாய் எழுதிய கட்டுரைகளெல்லாம் சிறிது காலத்திற்கு முன்புதான், 'நினேவுகளும் கட்டுரைகளும்', (Recollections and Essys) என்ற தலேப்பில் வெளி வந்தன. இந்த நூலில் பதினெட்டுக் கட்டுரைகள் உள்ளன. இக்கட்டுரைகளில், 'ஓர் இந்துக்கு எழுதிய கடிதம்' என்ற கடிதமும் சேர்ந்துள்ளது. அந்தக் கடிதம் மகாத்மா காந்திக்கு எழுதியதாகும். இக்கடிதத்தில் இந்தியர்களின் விடுதலே வேட்கையைப் பற்றியும், பகவத்கீதையைப் பற்றியும் தால்ஸ்தாய் தம் சொந்தக் கருத்துக்களேத் தெளிவாகக் கூறியுள்ளார். தாம் எழுதிய கடிதத்திற்கு முகவுரையாகக் காந்தியடிகளின் கடிதத்தையும் சேர்த்துத் தால்ஸ்தாய் தம் கருத்துக் களே விளக்கினுர். தால்ஸ்தாயின் கடிதத்திற்குத் தாம் எழுதிய முகவுரையில் காந்திப் பெரியார், "நம்முடைய காலத்தில் வழிகாட்டியாகத் திகழும் பேரறிஞர்களில்

தால்ஸ்தாயும் ஒருவர்; மாபெரும் எழுத்தாளர்களில் ஒருவர். அவர் போர்வீரராக இருந்து போரின் கொடுமைகளை உணர்ந்து போரை அடியோடு ஒழிக்க வேண்டுமென்று விரும்புகிறார்; பலாத்காரத்தைப் பலாத்காரத்தினால் ஒழிக்க முடியாதென்றும், அன்பினால்தான் வெல்ல முடியுமென்றும் ஓயாது சொல்லி வருகிறார். அவர் கூறுவதில் உள்ள மிகச்சிறந்த கருத்துக்களை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்'', என்று எழுதியுள்ளார். இக் கடிதத்திலிருந்து காந்தியடிகள் தால்ஸ்தாயிடம் கொண்டிருந்த மதிப்பை நன்கு அறிந்து கொள்ளலாம்.

தால்ஸ்தாயின் இறுதிக்காலத்தில் அமைதியென்பதே இல்லை. தமது குடும்பத்தில் ஏற்பட்ட சச்சரவுகளினால் 1910-ஆம் ஆண்டு தம் மகளுடன் தால்ஸ்தாய் யாஸ்நயபோல்யானா இல்லத்திலிருந்து வெளியேறித் தம் சகோதரி மரியாளைக் காணச் சென்றார். அவ்வம்மையாரைச் சந்தித்த பிறகு அவர் வெளிநாடுகளுக்குச் செல்ல விரும்பினார். அந்நோக்கத்துடன் இரயில் பிரயாணத்தை மேற்கொண்டார். பிரயாணத்திலேயே கடும் காய்ச்சல் கண்டது. அதனால் அவரது உடல்நிலை சீர்கெட்டது. அவரது இறுதி நாள் நெருங்கிற்று.

தமது பிறப்பிடத்தை விட்டு வெளிப்போந்த தால்ஸ்தாயைக் காணப் பலர் அவரைத் தேடிச் சென்றனர். சில நாட்களில் தால்ஸ்தாய் நோயினால் மேலும் வருந்தலானார். அவர் இறுதியில் அஸ்தபோவோ என்ற இடத்தை யடைந்தார். 1810-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 8-ஆம் நாள் அவர் இறைவன் திருவடி எய்தினார்.

அவர் மறைந்த செய்தி அவர் குடும்பத்தாருக்கு எட்டியது. செயற்கரிய செயல்களைச் செய்த தால்ஸ் தாய்க்கு அவர் உறவினர்கள் இறுதி வணக்கம் செலுத்த விரும்பினுர்கள். அதனுல் அவரது உறவினர்கள் அஸ்தபொவோவுக்குச் சென்று அவர் உடலை யாஸ்நய போல்யாஞவுக்கு எடுத்து வந்தனர். அவ்விடத்தில் அவரை அடக்கஞ் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுக ளெல்லாம் உடனே செய்து முடித்தனர்.

கிறித்தவ மத குருமார்களின் சம்பிரதாய முறை களையும் சடங்குகளையும் தால்ஸ்தாய் அவ்வப்பொழுது கண்டித்து வந்ததால் மதகுருமார்கள் எவரும் அவருடைய இறுதி வணக்கத்திலோ சவ அடக்கத்திலோ கலந்து கொள்ளவில்லை. தூய்மையை நாடிய தால்ஸ் தாய்க்கு யாதொரு கிறித்தவ சமயச் சடங்குமின்றி இறுதி வணக்கம் நடைபெற்றது. அவர் நெருங்கிய உறவினர்களும், சீடர்களும் இறுதி வணக்கத்தில் கலந்து கொண்டனர். அவரை நேரில் வந்து காண முடியாத நண்பர்கள் தம் நெருங்கிய உறவினர் ஒருவரை இழந்து விட்டது போலவே துயருற்றனர்.

லியோ தால்ஸ்தாய் இப்பூவுலகில் எண்பத்திரண்டு ஆண்டுகளுக்கு மேலாகவே வாழ்ந்தார். அவரது பூத வுடல் மறைந்து ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாயினும் அவரது புகழுடல் இன்றும் உலகெங்கும் நிலைபெற்று ஒளிபெற்று நிலவுகின்றது.

# 12. வழிகாட்டிய பேரறிஞர்

லியோ தால்ஸ்தாயின் வாழ்க்கை வரலாற்றைப் பார்க்கும்போது அவர் பொதுவாக உலக மக்களும், சிறப்பாக இரஷிய மக்களும் நன்னெறி கடைப்பிடித்து உய்யும் வண்ணம் வழிகாட்டிய பேரறிஞர் என்பது தெற்றெனப் புலப்படுகிறது. அவருடைய வாழ்க்கை உலக மக்களுக்கு ஒரு கலங்கரை விளக்குப்போல் ஒளி காட்டுகின்றது. எவருடைய வாழ்க்கையிலும் குறை காணலாம். நெல்லுக்கு உமியுண்டு, நீருக்கு நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்கும் உண்டு; எனினும் காய்தல் உவத்தல் அகற்றி ஆய்ந்து பார்க்கும்போது ஒருவர் பாலுள்ள குறைகளை மறந்து நிறைவு காண்பதே நாகரிகமாகும் என்பது சான்றோர் கருத்தாகும். துள்ளித் திரிகின்ற இளம் பருவத்தில் தால்ஸ்தாய் சூழ்நிலைகளின் வயப்பட்டுக் குற்றங்கள் சில செய்தமைக்குப் பிற்காலத்தில் மிகவும் வருந்தியுள்ளார்.

நம்நாட்டில் எண்பது ஆண்டுகள் வாழ்ந்த வயோதிகரை ஆயிரம் பிறை காணும் பேறு பெற்றவர் என்று போற்றுவதுண்டு. லியோ தால்ஸ்தாய் 1828-ஆம் ஆண்டில் பிறந்து 1910-ஆம் ஆண்டு வரையில் புகழுடன் வாழ்ந்து, எண்பத்திரண்டாம் வயதில் இம்மண்ணுலகை

விட்டு மறைந்தார். இவர் வாழ்நாளில் பயனின்றி வீணுகக் கழித்த காலம் சிறிதும் இல்லை என்று திண்ண மாகக் கூறலாம். பிள்ளைப் பருவங் கடந்தபின் சற்றேறக் குறைய அறுபதாண்டுகள் வரை அவர் பிறர் நலத்திற் கென்றே உழைத்துள்ளார் என்பதை நோக்கும்போது பயனுள்ள அவர் நீண்ட வாழ்க்கையை எவரேனும் புகழாமலிருப்பரோ ?

அவரது நீண்ட வாழ்வில் உலகம் போற்றும் நல்லியல்புகள் சிலவற்றை நாமும் கண்டு பயன் பெறுவோமாக.

**உடல் நலம்**

உழைப்பதற்கு உடல் வன்மை வேண்டுமென்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். சுவரிருந்தால்தானே சித்திரமெழுதலாம். இளமையிலிருந்தே அவர் உடற் பயிற்சியை மிகவும் விரும்பிச் செய்துவந்தார். அடிக்கடி வேட்டைக்குச் செல்வார். அதனுல் மனச் சோர்வும் உடலிளைப்பும் இன்றி எப்போதும் சுறுசுறுப்பாக ஏதேனும் ஒரு வேலை செய்து கொண்டிருந்தார். அச்ச மின்றி எதையும் துணிவுடன் செய்யக்கூடிய இயல்பு அவரிடம் ஐந்து வயதிலேயே இருந்ததை அவர் மேலே பறப்பதற்கு முயன்றதிலிருந்து அறிகிறோம். மற்றும் அவர் வாலிபப் பருவத்தில் ஒரு முறை தம்மைக் கொல்ல வந்த கரடியுடன் நேருக்கு நேராக நின்று அஞ்சாமல் மற்போர் செய்தார்.

**திருந்திய கல்வி முறை**

தமது நாட்டுக் குழந்தைகளுக்குச் சிறப்பான கல்வித் திட்டத்தையும் கற்பிக்கும் முறையையும் அளித்து,

அவர்கள் நல்ல முறையில் பயின்று அறிவாளிகளாகத் திகழ வேண்டுமென்பதும், மக்கள் வாழ்க்கைத் தரம் உயர வேண்டுமென்பதும் அவருடைய பேரவா. அதற்காக அவர் ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்து, பிரான்சு, இங்கிலாந்து, இத்தாலி, பெல்ஜியம் முதலிய நாடுகளுக்குச் சென்று சுற்றுப்பிரயாணம் செய்து, புதிய கல்வி முறையைக் கண்டுபிடித்துப் புகழ்பெற்ற புரோபல் (Frobel) போன்ற பேரறிஞர்களைக் கண்டு பேசியும், பள்ளிகளையும் கல்லூரிகளையும் நேரில் கண்டும் வந்தார். ஆனால் மிகச் சிறந்த கல்வி முறை என்று ஐரோப்பியர் போற்றும் ஐரோப்பியக் கல்வி முறையிலுள்ள குறைபாடுகளை நேரிற் கண்டு வந்த அவர், அவைகளை மிகக் கடுமையாகக் கண்டித்தும் பேசியும் வந்தார். அக் குறைபாடுகள் உருஷிய நாட்டுக் கல்வி முறையில் புகுதலாகாது என்ற முடிவுக்கு வந்தார். தால்ஸ்தாயின் கருத்தையும் கொள்கைகளையும் பாராட்டி அவர் வகுத்துக் காட்டும் முறைகளை அமெரிக்க ஐக்கிய நாடுகள் பின்பற்றின. ஆதலால் அமெரிக்கர் ஏற்படுத்திய கல்வி முறையே உருஷிய நாட்டுக்குத் தகுந்தது என்று தால்ஸ்தாய் அதைப் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்துள்ளார். உழவர்களும் பிற உழைப்பாளிகளும் மிக்க தமது நாட்டில் கற்றோர் தொகை மிகக் குறைவென்பதையும், கல்லாதார் அனைவரும் ஏழை மக்களே என்பதையும் அறிந்து உருஷிய நாட்டுக்குப் பொது நலக் கல்வித் திட்டம் அமைக்க வேண்டுமென்று அரசாங்கத்திற்கு அறிவித்ததோடு பல கட்டுரைகளையும் எழுதி வெளியிட்டார்.

எழுதவும் படிக்கவும் மட்டும் தெரிந்து கொள்வது கல்வியன்று என்பது அவர் கருத்து. பகுத்தறிவை

வளர்த்து மக்களை அறிஞர்களாக்குதற்குரிய போதன முறையை அவர் தெளிவாக விளக்கியுள்ளார். குடத்தில் தண்ணீர் நிரப்புவது போலப் பிள்ளைகள் உள்ளத்தில் ஆசிரியர்கள் சில செய்திகளை நிரப்பி அவர்கள் அவற்றை மனப்பாடம் செய்யும்படி வற்புறுத்தும் முறையை அவர் தீவிரமாகக் கண்டித்தார். அரைமணி நேரத்தில் கற்றுக் கொள்ளக் கூடியதை ஓர் ஆண்டுக் காலத்திலும், மூன்று ஆண்டுகளிலும் ஆசிரியர்கள் கற்பித்து வரும் முறைகளை அறவே வெறுத்தார். பிறருக்கு வழிகாட்டும் வகையில் தாமே தம் பிறப்பிடமாகிய யாஸ்நயபோல்யான விலுள்ள எளிய மக்களின் பிள்ளைகளுக்காக ஓர் இலவசப் பள்ளியை நிறுவி நடத்தி வந்தார். சிறு பிள்ளைகளுக் குரிய பாடப் புத்தகங்களையும் தாமே எழுதத் தொடங் கினர். அரசாங்கமும், பொருள் மிக்கோரும், பதவியி லுள்ளோரும் அவர் திட்டத்திற்கு ஆதரவு தரவில்லை. எனினும் அவர் பள்ளியை மிகச் சிறப்பாக நடத்தியதால் நாளுக்கு நாள் அது வளர்ச்சியுற்றது. அவரைப் பின்பற்றிப் பலர் அவருடைய கல்வி முறையை மேற் கொண்டு பள்ளிகள் நடத்தினர். வாலிப ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குக் கற்பிக்கும் முறைகளில் பயிற்சி அளித்தார். ஆனல் பலவகையான எதிர்ப்பினல் அவைகள் தொடர்ந்து நடைபெற இயலாமற் போயின. அவர் அனைவருக்கும் இலவசக் கல்வி அளித்தது பிற்போக்காளருக்கும் அரசாங்கத்திற்கும் ஐயத்தை விளைவித்தது. குழந்தைகள் உள்ளத்தைத் தாய் போலறிந்து அதற்கேற்ப அவர்களுக்கு இனிய முறையில் அறிவூட்டும் கல்வி முறையே சாலச் சிறந்தது என்று அவர் கூறினர். விளக்குதற் கேற்ற அறிவாற்றலும் திறமையும் ஆசிரியர்களிடம் பெரிதும் வேண்டற் பாலன என்பது அவர் கருத்து. இத்தகைய இலக்கணங்களை

யுடையவரே இறைவனருள் பெற்ற ஆசிரியர் என்று அவர் கூறியுள்ளார். கற்பிக்கும் முறைகளில் அவர் காட்டும் வழிகளை ஆசிரியர் பணியில் ஈடுபடுபவர் பின்பற்றினால் நாட்டிற்கு மிக நல்ல பயன் விளையும்.

**உழவர்க்கு உரிமை**

'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்பது அவரது சீரிய கொள்கை. யாஸ்நய போல்யானா போன்ற பெரும் பண்ணைகளில் தலைமுறை தலைமுறையாகப் பணி புரிந்து அடிமை வாழ்வில் மங்கிக் கிடக்கும் ஆயிரக்கணக்கான உருஷிய உழவர்களுடைய நிலைமையைக் கண்டு தால்ஸ்தாய் தமது இளம் பருவத்திலிருந்தே மிகவும் கவலை கொண்டு, அவர்கள் விடுதலைக்காகப் பாடுபட வேண்டுமென்று முடிவு செய்திருந்தார். பிற பதவிகளை ஏற்பதைக் காட்டிலும் யா ஸ் ந ய போ ல் யா ன வில் உழவர்களுக்கிடையே வாழ்ந்து அவர்கள் பணிகளில் தாமும் பங்கு கொள்வதை விரும்பினார். தாமும் அவர்களைப் போல் உழவுத் தொழில் செய்வதுண்டு. செருப்புத் தைத்தல் முதல் பல வேலைகளைத் தொழிலாளிகளைப் போலத் தாமே செய்து கொள்ளத் தொடங்கினார் என்பதைத் தால்ஸ்தாயின் வரலாற்றில் கண்டோம். அதனால் அவர் ஏழை பங்காளர் என்றும், தீனபந்து வென்றும் புகழ் பெற்றார். அடிமைகள் விடுதலையைப்பற்றி அவர் தொடர்ந்து கட்டுரைகள் எழுதிச் செய்தித் தாள்களில் வெளியிட்டும், பல கதைகளையும் நூல்களையும் வெளியிட்டும் கிளர்ச்சி செய்து வந்தார். அடிமைத்தளையை அறுக்குமாறு அரசாங்கத்தையும் வற்புறுத்தினார். இறுதியில் அவர் நோக்கம் வெற்றி பெற்றது. இரஷியாவில்-

இரண்டாம் அலெக்சாந்தர் அரசுக்கு வந்தபோது அடிமைகள் நிலைகண்டு உளமிரங்கி அவர்கள் விடுதலைக்கு ஆதரவு தந்தார். அரசாங்கம் விடுதலை அறிக்கையை வெளியிட்டபோது தால்ஸ்தாய் அளவற்ற மகிழ் வெய்தினார்.

### உலகு புகழ் எழுத்தாளர்

எழுத்தாளர் உலகில் தால்ஸ்தாய் புகழ் உச்சியை அடைந்தார் என்பது மிகையாகாது. கட்டுரைகளும், கதைகளும், நாவல்கள் என்னும் பெருங்கதை நவீனங் களும் எழுதுவதில் அவர் ஓர் ஒப்பற்ற கலைஞராகவே விளங்கினார். அவரால் இலக்கியத் துறை மிக்க வளம் பெற்றது. தம் நாட்டிலும் உலகில் பிற நாடுகளிலும் கல்வி, சமூகம், சமயம், முதலிய வாழ்க்கைத் துறை களில் புரட்சியை உண்டாக்கிற்று. அப்புரட்சி இலக்கி யங்களால் இரஷியநாடும் வேறு பல நாடுகளும் சீர்திருந்த வாய்ப்பும் வழிகளும் உண்டாயின. புரட்சி கரமான கருத்துக்களை வெளியிட்டு நல்வழி காட்டிய பேரறிஞர், ஒரு போதும் இரஷிய அரசியல் புரட்சி இயக்கத்தை ஆதரித்ததில்லை. இரஷிய எதேச்சதிகார ஆட்சியை எவ்வளவு வெறுத்தாரோ அவ்வளவு அரசியல் புரட்சிக்காரருடைய கொடிய முறைகளையும், அழிவு வேலைகளையும் கண்டித்தார். தால்ஸ்தாய் வெளியிட்ட பல வார வெளியீடுகள், திங்கள் வெளி யீடுகள், நூல்கள் ஆகியவற்றில் அடங்கியுள்ள கட்டுரை கள், கதைகள், கருத்தோவியங்கள் அனைத்தும் உலகத் திற்கு எக்காலத்தும் நன்மை பயக்கும் இலக்கியக் கருவூலங்கள் என்று போற்றுதல் வேண்டும். தால்ஸ்தாய் எழுதிய அன்னகரினின்னா, (Annakarenina), போரும்

அமைதியும் (War and Peace) என்ற நூல்கள் உலகில் வெளிவந்துள்ள பெருங் கதைகள் (Novels) எனப்படும் நவீனஇலக்கியத் தொகுதியில் முதலிடம் பெற்றுள்ளன. அவருடைய பத்தாண்டுக் காலச் சமய நூல் ஆராய்ச்சியின் பயனுக வெளிவந்த கட்டுரைகளும், கதைகளும், ஆராய்ச்சி நூல்களும் மக்களுக்கு வழிகாட்டிகளாக விளங்குகின்றன.

சமயத் தொண்டு

அவர் போலிச் சமயங்களேயும், பொருளற்ற சடங்குகளேயும் போற்றுவதில்லே. இயேசு கிறித்துவின் போதனேகளுக்குத் தக்க விளக்கம் தந்து உலக மக்களுக்கு மெய்யுணர்வு உண்டாக்கியுள்ளார். சிறு கதை, பெருங்கதை ஆசிரியராகவும், கட்டுரை வல்லுநராகவும் விளங்கிய இலக்கியக் கலேஞர் தால்ஸ்தாய், சமய ஞான ஆராய்ச்சியில் நீண்ட காலம் ஈடுபட்டுத் தெளிவு பெற்று, தாம் கண்ட இன்பம் இவ்வையகமும் பெற வேண்டுமென்ற பெரு நோக்கத்துடன் உலகத்திற்குப் புதுநெறி காட்டிப் புகழ் பெற்றுர். சமயக் கொள்கைகளே மக்கள்பால் திணித்துக் குருட்டு வழியில் அவர்களேச் செலுத்துவதைத் தவிர்த்து, அவர்கள் அறிவுப் பாதையில் சென்று மெய்யுணர்வு பெற்றுத் தூய உள்ளமும் மொழியும் செயலும் உடையவராக வாழ்வதற்கு வழி காட்டினர்.

"இறைவனின் இராச்சியம் நம்மருகில் இருக்கிறது; அது நாம் வாழும் இல்லத்தின் வாயிலில் உள்ளது" என்ற பொன்மொழியில் அவருக்குத் திண்ணமான நம்பிக்கை உண்டு. தூய்மை பொருந்திய அத்தெய்வீக இராச்சியம் நம் இருதயங்களிலெல்லாம்

இருக்க வேண்டுமென்பது அவரது பெரு விருப்பம். சுருங்கச் சொல்லின், மக்களனைவரும் மனமொழி மெய்த் தூய்மை பெற்று வாழ வேண்டுமென்பதாகும். மக்கள் இடையே வாழ்க்கையின் நோக்கம் மூன்று வகையாக இருப்பதைத் தால்ஸ்தாய் கண்டார். அவை: (1) உண்டு உறங்கி உலகின்பம் துய்த்தல், (2) உலகத்தில் புகழை நாடி வாழ்தல், (3) இறை பணிக்கென்றே வாழ்வது என்பவையாம். இவற்றில் மூன்றாவது நோக்கத்தையே தாம் உள்ளளவும் கடைப்பிடித்து வாழ வேண்டு மென்று முடிவு செய்துகொண்டார். சிற்றின்ப வாழ்வை அவர் வெறுக்கவில்லை. எனினும் அவர் அதிலேயே திளைத்துத் தம்மையும் உலகையும் மறந்து வாணாளை வீணாக்கவில்லை. பொதுநலப் பணியில் உடல் பொருள் ஆவிகளைத் தியாகம் செய்து உழைத்தார். ஆனால் அவர் புகழை நாடவில்லை; புகழ் அவரைத் தேடி வந்தது.

### இல்வாழ்க்கை

தால்ஸ்தாய் முப்பத்து நான்காம் ஆண்டில் பதினெட்டு வயதுள்ள மங்கையை மணந்தார். காதல் மணம் செய்துகொண்ட அவ்விரு காதலனும் காதலியும் கருத்தொருமித்து இல்வாழ்க்கையை இனிதாக நடத் தினர். ஈருடலும் ஓருயிரும்போல அவர்கள் இயங் கினர். ஒருவருக்கொருவர் உற்ற துணைவராக விளங் கினர். இருவரும் வெவ்வேறு சூழ்நிலையில் பிறந்து, குறிக்கோள்களிலும் பழக்க வழக்கங்களிலும் நடை யுடை பாவனைகளிலும் பெரிதும் மாறுபட்டு வளர்ந்தவ ராயினும் கணவனும், மனைவியுமாக வாழத் தொடங்கிய போது அவர்கள் ஒருவரை யொருவர் நன்கு அறிந்து

கொண்டு அன்புடன் பழகலாயினர். மக்களை வளர்த்துக் கல்வியறிவு புகட்டுவதிலும், கணவனின் பண்ணை வேலைகளைக் கவனிப்பதிலும், அவர் எழுதும் நூல்களை அச்சிட்டு வெளியிடுவதிலும் தால்ஸ்தாயின் வாழ்க்கைத் துணைவி தோன்றாத் துணையாக விளங்கினார். பொதுப் பணியில் ஈடுபட்ட தால்ஸ்தாய் அடிக்கடி மனைவியைப் பிரிந்து நீண்ட நாட்கள் வெளியில் சென்று வந்ததாலும், உழவர்களும் தொழிலாளர்களும் விடுதலை பெறப் பெரிதும் முயன்று கொண்டிருந்ததாலும், சமய ஆராய்ச்சியில் ஆழ்ந்து மெய்யுணர்வு பெற நாட்டங் கொண்டிருந்ததாலும் மண வாழ்கையின் பிற்பகுதியில் அவர் போதிய அளவு மனைவி மக்களோடு நெருங்கி வாழ இயலவில்லை. அக்காரணத்தால் அடிக்கடி கணவன் மனைவிக்குள் ஊடல் ஏற்படுவதுண்டு. இஃது உலக இயல்பு. இதனால் அவ்விருவரும் மனமொத்து வாழாமல் முரண்பட்டிருந்தனர் என்று கொள்ளுதல் அறமன்று. அவர் தமது காதலியின்பால் எவ்வளவு உண்மையாக நடந்து கொண்டாரென்பதற்கு ஒரு சான்று போதும். அவருடைய திருமணம் நடைபெறுதற்கு முந்திய நாள் மணமகளிடம் சென்று தமது நாட்குறிப்புப் புத்தகத்தைக் கொடுத்துப் படிக்கும்படி கூறினார். அதில் தமது தீய ஒழுக்கங்கள், நெறி தவறி நடந்த சம்பவங்கள் ஆகியவை யனைத்தும் குறிக்கப்பட்டிருந்தன. அவைகளைக் கண்டு மணமகள் திடுக்கிட்டுக் கண்ணீர் வடித்தாள். தமது சென்ற காலத்திய ஒழுகலாற்றை அவள் அறிந்திருக்க வேண்டுமென்று அவர் கருதிய பெருந்தன்மை நமது உள்ளத்தைக் கவர்கின்றது. “தன்னெஞ்சறிவது பொய்யற்க பொய்த்த பின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்,” என்ற வள்ளுவர் கருத்திற்கிணங்கத் தால்ஸ்தாய் பொய்யாது ஒழுகி

யுள்ளார். மணமகள் சோபியா அம்மையார் அவருடைய வாய்மையைப் பாராட்டி அவரிடத்தில் மேலும் பலமடங்கு அதிகமாக அன்பும் பற்றும் கொண்டு, அவருக்கு எல்லா வகையிலும் ஆதரவு செய்து வாழ்ந்து வந்தார்.

**உலகம் போற்றும் மனிதர்**

பேரறிஞர் தால்ஸ்தாய் ஒரு தீர்க்கதரிசியாகவே விளங்கினர். பெரும்பாலும் தீர்க்கதரிசிகள் தம் நாட்டில் கௌரவிக்கப்படுவதில்லை. அந்நிலையை நாம் தால்ஸ்தாயின் வாழ்க்கையில் காண்கிறோம். நிகழ் காலம் அறிஞர்களை ஏற்பதில்லை. எதிர்காலமே அவர்களைப் போற்றிப் புகழ்வது மரபாகி விட்டது. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் தால்ஸ்தாயின் புகழ் உலகெங்கும் பரவி நிலைத்துள்ளது. சிறப்பாக அவர் புகழ் நம் பாரத நாட்டில் உச்சநிலை எய்தியுள்ளது. ஞான ஒளி பெற்ற லியோ தால்ஸ்தாயின் அறவுரைகள் ஏழை, எளியவரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளன. அதனல் தொழிலாளர்களும் எளியோரும் அவரைப் போற்றித் தொழுகின்றனர். இரஷியாவுக்குச் செல்லும் உலக மக்களுக்கு யாஸ்நயபோல்யாஞ இப்போது ஒரு புனிதத் தலமாக விளங்குகிறது. தால்ஸ்தாயின் எழுத்தோவியங்களாக விளங்கும் அரிய நூல்கள் அவருடைய புகழ்ச் சின்னங்களாக உலகுள்ளளவும் நிலைபெறுமாதலால் அவர் இறந்தும் இறவா வரம் பெற்றவராக விளங்குகின்றார். அவருடைய பொன் மொழிகள் இப்பூவுலகிற்கு என்றென்றும் நல்வழி காட்டும் என்பது திண்ணம்.

---

# கிறிஸ்தபர் கொலம்பஸ்

## 1. மறுமலர்ச்சியும் புதுநாடு காண்டலும்

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவில் கல்வியிலும் கலைகளிலும் ஏற்பட்ட மறுமலர்ச்சியினால் மக்களுக்கு ஒரு புதிய ஊக்கம் ஏற்பட்டது. ஐரோப்பிய மக்கள் துணிகரமான அருஞ்செயல்களைப் புரிவதில் ஆர்வம் கொண்டிருந்தனர். ஆகவே, பதினைந்தாம் நூற்றாண்டில் நவீனகாலம் தொடங்கிற்று எனக் கூறலாம்.

ஐரோப்பிய மக்கள் தங்களுடைய பேருக்கத்தினால் கப்பற் பிரயாணத்திற்கு உதவியான பல புதிய கருவிகளைக் கண்டு பிடித்தனர். அவைகளில் மிகவும் உபயோகமானது திசை காட்டும் கருவியாகும். உலகப் பரப்பில் மூன்றில் இரண்டு பகுதிகளுக்குமேல் நீர் இருக்கிறது. மனிதர்களுக்கு அச்சம் கொடுப்பனவற்றுள் நீர்ப் பரப்பும் ஒன்றன்றோ? ஐரோப்பிய நாடுகளிலிருந்து இந்தியா, கிழக்கு இந்தியத் தீவுகள் முதலிய இடங்கட்குச் செல்லப் புதிய கடல் வழிகள் கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று.

திசை காட்டும் கருவி இத்தகைய புதிய கடல் வழிகளைக் கண்டுபிடிக்க மாலுமிகளுக்குப் பெருந்துணையாக விருந்தது.

த்விர, புதிய கல்வியின் பயனுக மக்களுக்குள் உலகத்தைப் பற்றிய அறிவு மிகவும் பெருகியது. உலகம் தட்டையானதன்று, உருண்டை வடிவமானது என்பதைப் பல மக்கள் அறிந்திருந்தனர். ஒருவன் ஓரிடத்தினின்று புறப்பட்டால், மீண்டும் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேரலாம் என்ற உண்மையை அறிந்து கொண்டனர். நெடுந்தூரக் கடற்பயணம் செய்வதற்குப் பெரிய கப்பல்கள் கட்டப்பட்டன. மார்க்கோபோலோ என்ற புகழ்பெற்ற மாலுமியின் (1254-1324) பிரயாணத்தின் பயனுக, சீனு, மங்கோலியா, இந்தியா, கிழக்கு இந்தியத் தீவுகள் முதலிய நாடுகளைப்பற்றி அறிஞர்கள் ஆராய்ச்சி செய்யத் தலைப்பட்டனர். பெருங்கடலைக் கடந்து, ஆசிய நாடுகளை அடையலாம் என்ற துணிவு பூண்டனர். மேலும் பதினைந்தாம் நூற்றுண்டில் ஹென்றி என்ற போர்த்துகல் மன்னர் புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதில் மிக்க ஆர்வம் காட்டினுர். அவருடைய முயற்சிகளெல்லாம் கீழ்நாடுகளுக்குக் கடல் வழி ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் செய்யப்பட்டவை. சிலர் ஆப்பிரிக்காவின் கரையோரமாகப் பிரயாணம் செய்து இம் முயற்சியில் வெற்றிபெற எண்ணினர். மற்றும் சிலர் ஐரோப்பாவிலிருந்து மேற்குத் திசையில் பிரயாணம் செய்தால் இந்தியாவின் கீழ்க்கரையை அடையலாம் என்று எண்ணினர்.

அக்காலத்து ஐரோப்பிய மக்கள் கீழ் நாடுகளைப் பற்றி வியந்து பேசிக் கொள்வார்கள்; சில கீழ் நாடு

களில் சிவக்கக் காய்ந்திருக்கும் பாறைகளும், பொங்கி எழும் கடலும் உண்டென்றும், மக்கள் தங்களுடைய தலைகளைக் கைக்குள் வளைத்து நடக்கிறார்கள் என்றும் சொல்லிக்கொள்வார்கள்; சில கீழ் நாட்டு நகரங்களி லுள்ள வீதிகள், பனித்துளிகள் எவ்வளவு சாதாரண மாகவிருக்குமோ அவ்வளவு சாதாரணமாகத் தங்கத் தகடுகளால் தளவரிசை செய்யப்பட்டிருந்தன வென்று பேசிக் கொள்வதுண்டு.

கீழ் நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்யப் புதிய கடல் வழிகளைக் கண்டுபிடிக்க முதன்முதலில் போர்த்துக்கல் நாடே வழி காட்டியது. கான்ஸ்டாண்டி நோபில் என்ற இடத்தைத் துருக்கியர் கைப்பற்றியதால் நில வழி அடைபட்டது. அங்குத் தடைகள் பல நேர்ந்தன. பழைய வாணிகவழிகள் ஆபத்திற்கு இடமாயின. அதனால் புதிய கடல் வழிகள் கண்டு பிடிக்கும் ஆவலும் அவசியமும் பெருகலாயின.

துணிவு மிக்க கப்பலோட்டிகள் இந்தியாவிற்கும் அதற்கப்பால் உள்ள கீழ் நாடுகளுக்கும் ஒரு கடல் வழி கண்டுபிடிக்கும் முயற்சிகளில் ஈடுபட்ட காலமும் மறுமலர்ச்சி இயக்கத்தின் காலமேயாகும். பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவில் புதிய நாடு களையும், புதிய கடல் வழிகளையும் கண்டுபிடிப்பதற் காகப் போர்த்துக்கல் அரசரான ஹென்றி தீவிரமான முயற்சிகளை மேற்கொண்டார். அதைப் போலவே இத்தாலி, ஸ்பெயின் நாட்டு மக்களும் புது வழி காணும் அரும்பணியில் பங்குகொள்ளப் பேராவ லுடன் முன்வந்தனர். நெடுங்கடலைக் கடந்து நீண்ட தூரம் சென்று பல புதிய நாடுகளைக் கண்டுபிடிக்க

வீரத்துடனும், விடாமுயற்சியுடனும் முன்வந்த மாலுமிகளில் கிறிஸ்தபர் கொலம்பஸ் என்பவர் புகழ் மிக்கவராவார்.

## 2. கொலம்பஸின் இளமைப் பருவம்

கிறிஸ்தபர் கொலம்பஸ் இத்தாலி நாட்டில் கி. பி. 1445-ஆம் ஆண்டில் ஜினேவா என்னும் நகரில் பிறந்தார். பதினைந்தாவது நூற்றுண்டில் அந்நகரில் கைதேர்ந்த நெசவாளர் பலர் வாழ்ந்து வந்தனர். ஆகவே அந்நகரம் நெசவுத் தொழிலில் சிறப்புற்று விளங்கிற்று. அந்நகரம் பல வகையிலும் பண்டைச் சிறப்பு வாய்ந்தது.

கொலம்பசின் தந்தையார் ஆட்டு ரோமத்தைச் சிக்கெடுத்து எளிய வாழ்க்கை நடத்தி வந்தார். எளியவராய் இருப்பினும் தம்முடைய சக்திக் கேற்ற மட்டும் மகனைக் கல்வி பயிலச் செய்தார். இளமையில் கொலம்பஸ் இலத்தீன் மொழியைக் கற்றுக்கொண்டு, கணிதத்திலும் ஓவியத்திலும் நன்கு தேர்ச்சி பெற்றுர். பள்ளியில் யாவரும் மெச்சும் வண்ணம் கற்று, பிறகு உயர்தரக் கல்விக்காகப் பேவியா என்ற இடத்தில் அக்காலத்தில் புகழ் பெற்றிருந்த பள்ளியில் சேர்ந்தார்.

பேவியாவில் கொலம்பஸ் தம்முடைய பதினுன்காவது வயது வரையில் கல்வி பயின்றுர். அவர் பற்பல நூல்களைக் கற்று ஓர் அறிஞரானுர். அவருக்குத் தம் தந்தையாரின் தொழிலில் சிறிதேனும் நாட்டமில்லை. அவர் கடல் வாழ்க்கையையே பெரிதும் விரும்பியதால் விரிந்த கடலின் மீது செல்லவே அவருக்கு விருப்புண்டாயிற்று. ஆகவே கொலம்பஸ் தம்முடைய பதினுன்காவது

வயதில் கடல் வாழ்க்கையை மேற்கொண்டு, மத்திய தரைக் கடல் ஓரமாகவுள்ள நாடுகளைச் சுற்றிப்பார்த்து, தம்முடைய அறிவைத் தெளிவுப் படுத்திக்கொண்டார். தம் பிரயாணங்களினுல் பல புதிய செய்திகளைத் தெரிந்துகொண்டதோடு புதிய புதிய நூல்களையும் கற்கலானுர். அவர் போர்த்துக்கல் தேசத்திற்குச் சென்று கப்பல் தலைவரானுர். மார்க்கோபோலோ தமது வரலாற்றில் கூறியிருந்த செல்வம் மிக்க சீன, ஜப்பான் நாடுகளுக்கும், கிழக்கு இந்தியத் தீவுகளுக்கும் செல்லவேண்டும் என்ற பேரவா அவர் மனத்தில் குடி கொண்டது. மற்ற மாலுமிகளைப்போல வானநூல், பூமியின் இயற்கை அமைப்பு, வடிவம் முதலியவற்றை இவரும் நன்கு அறிந்திருந்தார்.

கொலம்பசின் நண்பர்கள் கடற்பிரயாணம் செய்வதில் அதிகப் பழக்க முள்ளவர்களாயிருந்தமையாலும், அக்காலத்தில் புதிய தீவுகளைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் மிக்க துணிவு கொண்டு கப்பலேறி நெடுந்தூரம் சென்று வந்தமையாலும் கொலம்பசும் திரை கடலின் மீது பிரயாணம் செய்யலானுர். ஆனுல் அக்காலத்தில் மக்கள் கப்பலோட்டும் வித்தையில் நிறைந்த அறிவைப் பெற்றிருக்கவில்லை. கப்பல் பிரயாணம் செய்வதென்ருல் மத்திய தரைக் கடற்கரையிலுள்ள ஒரு துறைமுகத்திலிருந்து புறப்பட்டு, பார்பரி தேசத்துக் கடற் கொள்ளைக்காரர்களுடைய அச்சத்தை மனத்திற்கொண்டு வேறு துறைமுகங்களுக்குக் கரையோரமாகச் செல்லவேண்டும். ஆனுல் கொலம்பஸ் பிற கப்பலோட்டிகளைப் போலல்லாமல் செயற்கரிய செயல்களைச் செய்யவேண்டுமென்றும், திறமை மிக்க கப்பலோட்டியாகத் திகழ வேண்டும் என்றும் பேரவாக் கொண்டார். அவருடைய

உயரிய நோக்கங்கள் அவர் சிந்தையைவிட்டு அகலாமல் ஆழ்ந்து பதிந்திருந்தன.

*1501*-ஆம் ஆண்டில் அவர் எழுதிய குறிப்புக்களில் தமது விழுமிய கருத்துக்களைத் தெளிவாகக் கூறியிருக்கிறார். "நான் இளைஞனாக இருக்கும் போதே கடல் வாழ்க்கையை மேற்கொண்டேன்; அன்று முதல் இன்று வரையில் கப்பலோட்டியாகவே வாழ்ந்து வருகிறேன்; மார்க்கோபோலோவைப் போல உலகத்தின் அற்புதங்களை ஆராய்ச்சி செய்து அறிவைப் பெருக்கிக் கொள்வதே என் வாழ்க்கையின் நோக்கமாகும்" கொலம்பஸ் ஆராய்ச்சித் திறத்தினால் தாம் ஐரோப்பாவினின்று புறப்பட்டு மேற்குத் திசையிற் பிரயாணம் செய்தால் இந்தியாவின் கிழக்குக் கரையை அடையலாம் என்று திண்ணமாக எண்ணினார். மேலும் பெருங்கடலில் இன்னும் கண்டுபிடிக்கப்படாத நில பாகங்களும் இருக்கக் கூடுமோ வென்று ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார். பூமி உருண்டையாக இருப்பதால் உலகில் எப்பாகத்திற்கும் பிரயாணம் செய்யலாமென்று இரவு பகல் எப்போதும் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

கீழ் நாடுகளுக்குச் செல்ல ஒரு புதிய கடல் வழி காண வேண்டும் என்னும் எண்ணம் உருப்பெற்ற பின்னர் கிறிஸ்தபர் கொலம்பஸ் அக்கருத்தினை ஜினோவாவிலுள்ள அறிஞர் பலரிடம் அறிவித்தார்; பிறகு செல்வந்தர் பலரை நாடி அவர்களிடம் தம் முடைய கருத்துக்களைக் கூறித் தக்க பொருளுதவி வேண்டினார்; ஆனால் அவரது கருத்தை உணர்ந்த மக்களுள் பலர் அவரை எள்ளி நகையாடினர்; சிலர் அவருக்காக இரங்கினர். அவர் பிறந்த ஊரில் தமக்கு

எள்ளளவு ஆதரவும் கிடைக்கவில்லையே என்று மனம் வருந்தினர். கொலம்பஸ் வறுமையிலும் பணிவுடன் நடந்து கொண்டார். சின்னுட்களுக்குப் பின் போர்த்துகல் நாட்டு மன்னரான ஹென்றி என்பவர் கப்பலோட்டிகளுக்குக் காட்டி வந்த ஆதரவை யறிந்து ஜினேவாவை விட்டு வெளியேறிப் போர்த்துகல் நாட்டின் தலைநகரான லிஸ்பனை அடைந்தார். புதிய தாகக் கண்டு பிடிக்கப்பட்டவைகளைப் பற்றிய செய்தி களை நன்ருய்த் தெரிந்து கொள்வதன் பொருட்டு லிஸ்பனுக்குச் சென்ற கிறிஸ்தபர் கொலம்பஸ் அவ்விடத் திலேயே நிலைத்து விட்டார். லிஸ்பன் சென்ற சின்னுட் களுக்குள் அவ்விடத்திலுள்ள ஒரு வயோதிக மாலுமியின் மகளைத் திருமணஞ் செய்து கொண்டார்.

## 3. பிற நாடுகளின் ஆதரவு நாடல்

### போர்த்துகலில் முயற்சி

மேற்குத் திசை வழியாக இந்தியாவுக்குப் பிரயாணம் செய்யத் தமக்குக் கப்பல்களையும் மாலுமி களையும் தந்து உதவி செய்யக்கூடிய அரசர் ஒருவரைக் கொலம்பஸ் தேடித் திரிந்தார். இவ்வுதவிக்கு அவர் போர்த்துகல் மன்னரான ஹென்றியை நாடினர். அப்போது கொலம்பசுக்குச் சற்றேறக்குறைய முப்பத் திரண்டு வயதிருக்கும். கொலம்பஸ் 1474-ஆம் ஆண்டில் லிஸ்பனை அடைந்தார். போர்த்துகல் மன்னரான ஹென்றி ஒரு புகழ் பெற்ற கப்பலோட்டி. அவர் இளவரசராக இருந்தபோதே நாகரிக மறுமலர்ச்சியின் ஆர்வம் நிரம்பப் பெற்றவராய்ப் புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் முயற்சிகளில் ஈடுபடலானுர். இளவரசர் ஹென்றி தம் நாட்டுக் கப்பலோட்டிகளுக்கு மாலுமித்

தொழிலில் பயிற்சியளிக்கத் தம்முடைய தலைநகரத்தில் ஒரு பள்ளியை நிறுவினர். அப்பள்ளியில் பயிற்சி பெற்றவர்களை ஆதரித்தார். அவர் அட்லாண்டிக் பெருங் கடலின் தென் பகுதியைக் கடந்து ஆப்பிரிக்காவின் தென்கோடி வரையில் பிரயாணம் செய்து தம் நாட்டுக்குத் திரும்பினர்.

புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் முயற்சிகளில் சலியாமல் ஈடுபட்டிருந்த அரசர் ஹென்றியைத் தமக்கும் பொருள் அளித்து ஆதரவு தருமாறு கொலம்பஸ் வேண்டினர். தாம் வகுத்துள்ள திட்டத்தையும் அரசருக்கு அறிவித்தார். கொலம்பசின் திட்டத்தைக் கேட்ட ஹென்றி சிந்தனையில் ஆழ்ந்தார். மேலைக்கடலுக்கப்பால் புதிய நாடொன்று இருக்கக் கூடுமோ என்றும், மேற்குத் திசையாகச் சென்றால் கீழ்த் திசையிலுள்ள இந்தியாவின் கரையை அடைய முடியுமோ என்றும் அவர் பலவாறு ஐயுற்றார். கொலம்பசின் திட்டத்திலும் முயற்சிகளிலும் மன்னருக்கு நம்பிக்கை பிறந்தது. ஆனல் மன்னரின் மனம் ஒருநிலையில் நிற்கவில்லை. இந்நிலையிலிருந்த ஹென்றி, ''பொறுமையுடன் இருந்தால் நான் ஏதாவது ஒரு முடிவிற்கு வர ஆராய்கிறேன்'' எனக் கொலம்பசுக்குப் பதிலுரைத்தார். கொலம்பசை அரசர் பலமுறை சந்தித்தார். அட்லாண்டிக் கடலைக் கடப்பதற்கு வேண்டிய கப்பல்களைக் கட்டுவதற்குத் தேவையான பணச் செலவையும் கணக்கிட்டார்; பெருங்கடலைக் கடப்பதால் நிகழக்கூடிய துன்பங்களையும் கற்பனை செய்து பார்த்தார். இரண்டையும் சீர்தூக்கிப் பார்த்து அவரால் எவ்வித முடிவிற்கும் வரமுடியவில்லை.

மன உறுதி வாய்ந்த கொலம்பஸ் தம்முடைய பயணத்திற்கு வேண்டிய பொருள் உதவியையும் ஏற்பாடுகளையும் மன்னர் செய்து கொடுப்பார் என்று எதிர்பார்த்துப் பல ஆண்டுகள் போர்த்துகல் நாட்டில் தங்கினர். மன்னர் ஹென்றியும் கொலம்பசின் திட்டத்திற்கு ஆதரவு காட்டக் கிறித்தவ மதத் தலைவரான போப்பாண்டவரின் ஆலோசனையையும் ஆசிகளையும் வேண்டினர். கத்தோலிக்க மதத்தலைவரும் ஒரு நல்ல முடிவுக்கு வர இயலவில்லை. கொலம்பசின் திட்டத்தில் ஏதாவது உண்மை இருக்குமா எனக் கண்டறிய ஹென்றி மன்னரே ஒரு மாலுமியை அனுப்பி ஆராய்ச்சி செய்து வருமாறு போப்பாண்டவர் கட்டளையிட்டார். உடனே ஹென்றியும் போப்பாண்டவரின் கட்டளைக் கிணங்கி தம்முடைய மாலுமிகளில் ஒருவரை ஒரு கப்பலில் மேலைக் கடலைத் தாண்ட அனுப்பி வைத்தார். ஆனல் அம்மாலுமி புயற் காற்றில் சிக்கி உயிர் துறந்தான். இவற்றைக் கேள்வியுற்ற கொலம்பஸ் இனி ஹென்றியின் உதவியை எதிர் பார்ப்பதில் பயனில்லை என்று கருதி வேறு மன்னர்களின் உதவியை நாடினர். கொலம்பஸ் 1474-ஆம் ஆண்டு முதல் 1484-ஆம் ஆண்டு வரையில் போர்த்துகலில் தங்கினர். அவருடைய முயற்சி வெற்றி பெறவில்லை. ஆனலும் அவர் தந்நம்பிக்கையைச் சிறிதும் தளரவிடவில்லை.

## ஸ்பெயினில் முயற்சி

கொலம்பஸ் போர்த்துகல் மன்னரிடம் பண உதவியைப் பெறும் முயற்சிகளில் ஏமாற்றம் அடைந்ததால் பிற அரசர்களையும் பிரபுக்களையும் நாடித் தமது திட்டத்

திற்கு ஆதரவு தேடினுர். தம்முடைய கருத்தை நிறை வேற்றுவதற்கு வேறு வழியில்லே எனப் பலமுறை மனம் சலித்து அவர் வெறுப்படைந்தார். ஆனுல் தம்முடைய மன உறுதியைத் தளர விடாமல் மேன்மேலும் முயற்சி செய்து வந்தமையால் ஸ்பெயின் நாட்டிற்குச் செல்லப் பிரயாணப்பட்டார். அவர் மனமிடிந்து வறுமையில் வாடி காஸ்டைல் நகரத்தில் ஒரு கன்னியா மடத்தருகே தரையில் வீழ்ந்து கிடந்தார். அது கண்டு அம்மடத்தின் துறவிகள் அவருக்கு உணவு கொடுத்து ஆதரித்தனர். பிறகு அவரது வரலாறு அறிந்து நாளடைவில் பெர்டினுண்டு அரசருக்கும் இசபெல்லா அரசிக்கும் அவரை அறிமுகம் செய்து வைத்தனர்.

ஸ்பெயின் நாட்டு அரசி இசபெல்லா கொலம்பசின் முழு வரலாற்றையும் திட்டத்தையும் கேட்டபோது, அவருக்குக் கொலம்பசிடம் நல்லெண்ணமும் பேரிரக்க மும் உண்டாயின. கொலம்பசின் உண்மையான ஆர்வமும், செயலாற்றுதற்கேற்ற துணிவும், தளராத த்நம்பிக்கையும் அரசியின் உள்ளத்தைக் கவர்ந்தன. எத்தனேமுறை தமது முயற்சியில் தோல்வியுற்ருலும், கொலம்பஸ், சலிப்படையாமலும், அவமதிப்புக் கொள்ளாமலும் தாம் கருதிய கருமத்திலேயே கண்ணுக இடையருது மேன்மேலும் முயலுபவர் என்பதை அரசியார் மிக விரைவில் அறிந்து கொண் டார். ஆனுல் கொலம்பஸ் இசபெல்லா அரசியாரைச் சந்தித்த காலத்தில் ஸ்பானியர்களுக்கும் தென் ஐரோப்பிய 'மூர்'களுக்கு மிடையே ஒரு கடும் போர் நடந்து கொண்டிருந்தது. மேலும் கொலம்பசுக்கு வேண்டிய அளவு உதவி செய்ய அரசியாரிடம் பணமில்லே. மற்றும் அரசியார் போர்த்துகல் மன்னரைப்

போல் மதத் தலைவரான போப்பாண்டவரின் அனுமதியையும் ஆசியையும் பெறவேண்டியிருந்தது. இரண்டொரு செல்வாக்கு மிக்க ஸ்பானியர் அளவற்ற செல்வம் திரட்டும் ஆசையால் இந்தியாவிற்குப் புதுவழி காண ஆயிரக்கணக்கான கிலோ மீட்டர் தொலைவு கடற்பிரயாணம் செய்து அலைவது மதியீனம் என்று கூறி, அரசிக்கு அச்சத்தையும் ஊட்டினர். புதுமை காணும் ஆர்வத்தில் இசபெல்லா கொலம்பசுக்குச் சிறிதும் பிற்பட்டவரல்லர். ஆனால் கொலம்பசின் பயணத்திற்கு வேண்டிய பொருள்களையும், மதகுருமார்களின் ஆதரவையும் அவரால் பெற இயலவில்லை. ஓராண்டு கழிந்தபின் கொலம்பஸ் அரசியாரை மீண்டும் சந்தித்து அவருடைய ஆதரவை நாடினார். ஆனால் அரசியார் கொலம்பசுக்கு எவ்விதத்திலும் துணைபுரிய இயலவில்லை.

ஸ்பெயினில் கொலம்பஸ் செய்த முயற்சிகள் வீணாயின. ஆனால் கொலம்பஸ் தளர்ச்சி அடையவில்லை. அவரது மனவுறுதி சிறிதும் குறையவில்லை. தாம் செய்த முடிவைச் சிறிதுகூட மாற்றிக் கொள்வதற்கு அவர் விரும்பவில்லை. பிறகு கொலம்பஸ் இங்கிலாந்து மன்னரான ஏழாம் ஹென்றிக்குத் தம்முடைய விண்ணப்பத்தை அனுப்பிப் பணவுதவி செய்யுமாறு வேண்டினார். ஆனால் அவருடைய இசைவு பெறக் கால தாமதமாகும் போலிருந்தது.

தளராத ஊக்கமும், விடா முயற்சியும், கலங்காத உள்ளமும், புதுமை காணும் துடிப்பும் கொண்டவராக இருந்ததனால் கொலம்பஸ் மற்றொரு முறை உதவிபெற முயன்றார். பிரான்சு மன்னருக்கும் விண்ணப்பத்தை

அனுப்பி தம்முடைய சகோதரனையும் அம்மன்னரை நேரில் கண்டு தமது கோரிக்கையை விளக்குமாறு அனுப்பினுர். ஆனுல் பிரான்சு மன்னர் துணைபுரிய மறுத்தார். இவ்வாறு கொலம்பஸ் செய்த முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப் போயின. ஆனுல் அட்லாண்டிக் கடலைக் கடந்து இந்தியாவிற்குப் புதிய வழியைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று செய்த முடிவைக் கைவிடாது பலரிடம் கூறிவந்தார். நாளடைவில் அவ்வெண்ணம் அவர் உள்ளத்தில் நிலைபெற்று விட்டது. அப்பயணத் திற்கு வேண்டிய முயற்சிகளில் முனைந்து முன்னேறத் துணிந்தார்.

## மதகுரு யோவான் பேரிஸ் ஆதரவு

கொலம்பசின் மனம் பொங்கும் கடல் அலைகளைப் போல் அலைந்து கொண்டிருந்தது. அவரது மனம் உண்மையில் அலைகடலினிடத்திலேயே நிலை கொண் டிருந்தது. ஒருவாறு தம்முடைய மனத்தைத் திடப் படுத்திக் கொண்டு தமது சுற்றுப் பிரயாணத்தை முடித்து ஸ்பெயின் நாட்டிற்குத் திரும்பினுர். ஸ்பெயினில் எதிர்பாராத விதமாக கொலம்பஸ் ஒரு கத்தோலிக்க மதகுருவைச் சந்தித்தார். அம்மதகுரு யோவான் பேரிஸ் என்னும் புகழ் பெற்ற பேரறிஞர். அவர் ஆராய்ச்சியில் மிக்க ஆர்வமுடையவர்; பிறர் கண்டிராத காட்சிகளைக் கண்டு களிக்க வேண்டும் என்ற எண்ணமும், புதுமையைக் காணவேண்டும் என்ற பேரவாவும் கொண்டிருந்தவர்.

ஸ்பெயினில் கொலம்பஸ், அறிஞர் யோவான் பேரிஸ் அவர்களைச் சந்தித்துத் தம்முடைய கருத்துக்

களைக் கூறி தமக்கு ஆதரவு காட்டுமாறு வேண்டினர். கற்றறிந்த யோவான் பேரிஸ் கொலம்பசின் திட்டத்தைக் காது குளிரக் கேட்டு நன்கு சிந்தித்துப் பார்த்தார். இசபெல்லா அரசியாரிடம் கீழை நாடுகளுக்குச் செல்லக் கடல் வழி கண்டுபிடிப்பதற்கு வேண்டிய அவசியத்தைப் பற்றிக் கூறி, கொலம்பசின் துணிவுமிக்க திட்டத்தைப் பற்றி அவ்வரசியாரிடம் பெரிதும் பாராட்டிப் பேசினர். பின்னர்க் கொலம்பசின் அறிவுத் திறனையும் தளராத ஊக்கத்தையும் நன்கு உணர்ந்த மதகுரு, காலத்தை வீணுக்காது இசபெல்லா அரசியாருக்குக் கடிதம் எழுதினர்; "இந்த வாய்ப்பை நாம் இழக்கலாகாது; தாங்கள் இப்போது கொலம்பசுக்கு உதவி செய்தால் உலக வரலாற்றில் அழியாப் புகழ் பெறுவீர்கள்; தங்களை அறிஞர் உலகம் போற்றிப் பாராட்டும்," என்று எழுதிக் கொலம்பசுக்குச் செய்ய வேண்டிய உதவியின் அவசியத்தை வற்புறுத்தினர். அறிஞர் யோவான் செய்த பேருதவியைக் கொலம்பஸ் ஒரு போதும் மறக்கவில்லை.

## இசபெல்லா அரசியின் ஆர்வம்

அறிஞர் யோவான் பேரிஸ் கொலம்பசின் திட்டத்தை நன்கு ஆராய்ந்து, அக் கப்பலோட்டிக்குத் தக்க பொருளுதவி செய்ய வேண்டும் என்று வற்புறுத்தியதால், அரசியார் உடனே தம்மை வந்து காணும்படி அம் மதகுருவுக்குச் செய்தி அனுப்பினர். தம்மைப் போலப் பிறரும் கொலம்பசின் ஆராய்ச்சித் திறத்தைத் தெரிந்து கொண்டு கொலம்பசுக்கு ஊக்கமளிக்க முன் வருவதைப்பற்றிச் சிந்தித்து அரசியாரும் பெருமகிழ்ச்சியடைந்தார். ஸ்பானியர் புதுமையைக் காண

வேண்டும்; புதுமையை நுகர வேண்டும்; புதுமையில் வாழவேண்டும் என்ற எண்ணம் இசபெல்லா அரசிக்குப் பெரிதும் உண்டு. பிரயாணத்தைப் பற்றி மேலும் ஆராய்ச்சி செய்வதற்காக அறிஞர் யோவான் பேரிசும் கொலம்பசும் அரசியாரைக் காணச் சென்றனர். அடக்கமும் பொறுமையும் இயற்கையாகவே பெருமள வில் வாய்க்கப் பெற்றிருந்த கொலம்பஸ் தமக்கு அரசியார் பொருளுதவி செய்ய முன்வருவாரோ, மாட் டாரோ என்று ஐயுற்று மனச் சோர்வடையவில்லை. அரசியார் அவருடைய திட்டத்தை முழு மனத்துடன் ஆதரிப்பதாகவும், அந்தத் திட்டம் வெற்றி பெறும் என்பதில் அவ்வரசியாருக்குச் சிறிதும் ஐயம் இல்லை யென்றும் கொலம்பஸ் நம்பியிருந்தார். கொலம்பஸ் மீண்டும் அரசியாரைச் சந்தித்தபோது அவர் நாற்பத் தைந்து வயதை அடைந்திருந்தார்.

அரசியார் கொலம்பசின் மனோதிடத்தை வியந்து, புதியதொரு கடல் வழியைக் கண்டு பிடிப்பதனால் ஸ்பெயின் நாட்டு மக்களுக்கு ஏற்படக்கூடிய புகழைப் பற்றி எண்ணினார். கொலம்பசும் அரசியாரிடம் உயிருக்கும் துணிந்து தாம் செல்லும் கடற் பிரயாணத் தினால் பொன்விளையும் பூமியெனப் பெயர்பெற்ற கீழை நாடுகளைக் கண்டுபிடிக்க முடியும் என்று திண்ணமாகக் கூறினார். அரசியாருக்கும் அது வரையில் ஐரோப்பியர் அறிந்திராத தீவுகளும் நாடுகளும் பல விருந்தன என்று தெரிய வந்தது. உலகம் உருண்டை வடிவமாகையால் மேற்குப் புறமாகச் சென்றால் கீழ் நாடுகளின் கிழக்குக் கரையை அடையலாம் என்ற நம்பிக்கையும் அவருக்கு உண்டாயிற்று. தவிர இப்பிரயாணத்தை முற்றுப்பெற நடத்தத் தக்க திறமையுள்ள தீரமாலுமி கிறிஸ்தபர்

கொலம்பசைத் தவிர வேறொருவருமில்லை என்று அரசியார் கருதினர். "கொலம்பஸ் மிகுந்த தைரிய சாலி; ஆக்கவேலை செய்யக்கூடிய ஆற்றல் படைத்த வர்; எடுத்த காரியத்தை முடிக்கவேண்டும் என்னும் மன உறுதியுடையவர். மேற்குத் திசையாய்க் கீழ் நாடுகளுக்கு வழிதேட வேண்டிய பெருங்காரியத்தைத் மேற்கொள்ளக் கூடிய திறமைசாலி அவரைத் தவிர வேறொருவரில்லை," என்று அரசியார் பலமுறை மன்னருக்கு எடுத்துரைத்தார். ஆனல் பெர்டினண்டு மன்னருக்குக் கொலம்பசின் திட்டத்தில் எவ்விதமான நம்பிக்கையும் ஏற்படவில்லை. மேலும் கொலம்பசுக்குத் தேவையான உதவியைச் செய்வதற்கு மன்னர் கையில் பணமுமில்லை. ஸ்பெயின் அரசாங்கம் அப்பொழுது கிரானடாவில் முரட்டு மூர் வகுப்பினருடன் போரில் ஈடுபட்டிருந்தது.

## ஆதரவு பெறுதற்குரிய சூழ்நிலை

மூர் வகுப்பினருடன் அரசரும் அரசியும் செய்து வந்த கடும்போர் எதிர்பாராத விதமாக, கி. பி. 1492 ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் முடிவெய்தியது. பல்லாண்டுகளாக நடந்து வந்த அப்போரில் ஸ்பானியர் வெற்றி கண்டனர். போரில் பெருந்தொகை செல வழிக்கப்பட்டதால் அரசியால் கொலம்பசுக்கு எவ்வித பொருளுதவியும் உடனே செய்ய இயலவில்லை. ஆகையால் அரசி மீண்டும் கொலம்பசைப் பொறுமை யுடன் இருக்குமாறு வேண்டினர். போர்த்துகலில் கொலம்பஸ் பத்தாண்டுகள் கழித்தார். பிறகு ஸ்பெயினில் அவர் ஏழாண்டுகள் கழிக்க வேண்டிய தாயிற்று. ஆனல் கொலம்பஸ் தம்முடைய முயற்சிகளைக்

கைவிடவில்லை, ''முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்'' என்பதை அவர் நன்குணர்ந்திருந்தார்.

ஸ்பானியர்களுக்குப் பெருமையையும் புகழையும் தேடிக் கொடுக்க வேண்டும் என்பதையே தம்முடைய நோக்கமாகக் கொண்டிருந்த இசபெல்லா அரசியாரிடம் கொலம்பசுக்கு மிக்க நம்பிக்கையும் நன்மதிப்பும் ஏற்பட்டன. ஆகவே அவர் மீண்டும் அரசியைச் சந்தித்தார். கிரனடா வீழ்ச்சிக்குப் பின் அரசரும் அரசியும் நாட்டுப் பணியில் ஈடுபட்டு நல்லாட்சியை நடத்தி வந்தனர். அவர்களுடைய ஆட்சிக்கு ஏற்ற முண்டாகக் கூடிய வகையில் தமக்கு உதவி செய்யுமாறு கொலம்பஸ் அவர்களை வேண்டினர். அரசியார் கொலம்பசுக்கு வேண்டிய பணமும் மற்ற சாதனங்களும் அளிப்பதற்கு மன உறுதி பூண்டார். ஆனல் மன்னர் அரசியின் விருப்பத்திற்காகக் குடிகளின் வரிப்பணத் தினின்று கொலம்பசுக்கு உதவி செய்ய முன்வரவில்லை. கொலம்பசின் விடாமுயற்சியைக் கண்டு, அவருக்குத் தகுந்த உதவி செய்யவேண்டும் என்று அரசியார் விரும்பினர். அரசர் உதவி செய்தாலும் செய்யா விட்டாலும் தாமே கொலம்பசுக்கு உதவி செய்யத் தீர்மானித்தார். எப்படியாவது, எங்கிருந்தாவது தாம் அவருடைய பிரயாணத்திற்கு வேண்டிய பணத்தையும், கப்பல்களையும், பிற சாதனங்களையும் தேடிக் கொடுப் பதாக அரசியார் கொலம்பசிடம் கூறினர். ஆனல் அதற்குமுன் தம்முடைய நிபந்தனைகளைக் கூறுமாறு அரசியார் கொலம்பசை அழைத்தார்.

### கொலமபசின் நிபந்தனைகள்

அரசியாரின் அழைப்பைப் பெற்ற கொலம்பஸ் இசபெல்லா அரசியாரை மீண்டும் சந்தித்தார். இச்

சந்திப்பு உலக வரலாற்றில் சிறந்த இடம் பெற்றுள்ளது. ஏனெனில் இச்சந்திப்பின் பயனாகக் கொலம்பஸ் தம்முடைய பிரயாணத்தை மேற்கொள்வதற்கு வேண்டிய பணவுதவியும் மற்ற சாதனங்களும் பெற்றார். தம்முடைய நிபந்தனைகளைக் கூறுமாறு அரசி அவரைக் கேட்டார். அப்போது அவர், ''நான் மேற்கொண்டுள்ள கடற் பிரயாணத்திற்கு வேண்டிய பணமும் மற்றச் சாதனங்களும் கொடுக்க வேண்டுகிறேன். நான் வெற்றி கண்டால் பெருங் கடலின் கடற்படைத் தலைவர் என்ற பட்டமும், நான் கண்டுபிடிக்கும் நாடுகளின் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கும் எனக்குக் கொடுக்க வேண்டும். நான் அரசரையும் அரசியாரையும் என்னால் கண்டுபிடிக்கப்படும் நாடுகளின் ஆடசியாளர்களாக்குவேன். என்னை இனிமேல் ஒரு ஸ்பானியன் என்றே நான் கருதுவேன். இனி என் பெயர் கிறிஸ்தபர் கொலம்பஸ் அன்று; இனி என் பெயர் கிறிஸ்தபர் கோலன் (Colon) என்பதே,'' என்று வீராவேசத்துடன் பேசித் தம்முடைய நிபந்தனைகளைத் தெரிவித்துக் கொண்டார். இந் நிபந்தனைகளைக் கேட்ட அமைச்சர்களும் அரசியாரும் கொலம்பசைப் பார்த்து, ''எம்பாலுள்ள அன்பையும் எங்கள் நாட்டின் மீதுள்ள உங்கள் பிரியத்தையும் நாங்கள் மெச்சுகிறோம். அதற்காக உமக்கு எங்களுடைய நன்றி. ஆனால் உம்முடைய நிபந்தனைகள் ஏற்கத்தக்கவையல்ல. கப்பற்படைத் தலைவர் என்ற பட்டத்தைக் கொடுக்க ஒப்புக்கொள்கிறோம். ஆனால் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கு வழங்க முடியாது,'' என்று கூறினர். கொலம்பசின் நிபந்தனைகள் முற்றிலும் ஒப்புக் கொள்ளப் படவில்லை. ஆனால் அவர் தம் வருமானத்தின் பங்கைக் குறைத்துக் கொள்ளச் சற்றும் சம்மதிக்கவில்லை. பேராற்றல் உடைய

தம்மைப் போன்ற ஒரு கப்பல் படைத் தலைவனுக்குத் தக்க ஆதரவு காட்டக் கூடியவர் யாரும் இல்லையே என்று கொலம்பஸ் மனம் வருந்தினர். பிறகு மிக்க சலிப்புடன் வெளியே புறப்பட்டார்.

கொலம்பஸ் தலைநகரை விட்டு நெடுந்தூரம் போனர். அவர் போனபிறகு அரசியார் மீண்டும் அவருடைய நிபந்தனைகளைப் பற்றி நன்கு சிந்தித்தார். "அஞ்சா நெஞ்சமும் விடா முயற்சியும் நிறைந்த கொலம்பசின் கோரிக்கைகள் நியாயமானவையே அவற்றை நான் ஒப்புக்கொள்வேன்" என்று அரசியார் தமக்குள் முடிவு செய்துகொண்டு உடனே கொலம்பசைத் திரும்ப அழைத்து வருமாறு ஒரு குதிரை வீரனை அனுப்பி வைத்தார். கொலம்பசும் அரசியைக் காணத் திரும்பி வந்தார்,

## அரசியார்—கொலம்பஸ் ஒப்பந்தம்

கி.பி. 1492 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 17 ஆம் நாளில் அரசியாருக்கும் கொலம்பசுக்குமிடையே ஓர் ஒப்பந்தம் எழுதப் பெற்றது. அதன்படி கொலம்பசுக்குக் கடற்படைத் தலைவர் (Admiral of the Ocean) என்ற பட்டமும் வழங்கப்பட்டது. கண்டுபிடிக்கப்படும் நாடுகளின் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கைக் கொடுக்கவும் அரசியார் சம்மதித்தார். அரசியாருக்கு ஓர் உண்மையான தொண்டனுக நடந்துகொள்வதாகக் கொலம்பஸ் ஒப்புக்கொண்டார். அரசியாரின் அமைச்சர்களும் பிரபுக்களும் கொலம்பஸ் தம்முடைய கருத்தை நிறைவேற்ற இயலாது என்றும், அவருடைய முயற்சி தோல்வியடையும் என்றும் அரசியாரிடம் பலமுறை கூறிப் பிரயாணத்தைத் தடுக்கப் பெருமுயற்சி

செய்தனர். ஆனல் அரசியார் கொலம்பசுக்கு உதவி செய்யவேண்டும் என்ற எண்ணத்தைப் பல ஆண்டு களுக்கு முன்னரே உள்ளத்தில் கொண்டிருந்தமையால் அவர் முடிவை எவராலும் மாற்ற முடியவில்லை. அவசிய மேற்பட்டால் தம்முடைய சொந்த ஆபரணங்களை அடகு வைத்தாவது கொலம்பசின் பிரயாணத்திற்கு ஏற்பாடு செய்ய மனவுறுதி கொண்டார் அரசியார்.

## 4. கொலம்பசின் முதற் பிரயாணம்

கொலம்பசின் பிரயாணத்திற்கு வேண்டிய பெருந் தொகையையும், மற்றச் சாதனங்களையும் சேகரிப்பதற்கு அரசியாரும் தன வணிகர்களும் ஏற்ற முயற்சிகள் அனைத்தும் செய்தனர். வேண்டிய பணத்தை அரசியார் தாமே சேகரித்துக் கொடுக்க மனவுறுதி கொண்ட போதிலும் அரசியாருடைய ஆபரணங்களைக் கொதுவை (அடமானம்) வைத்துக் கொலம்பசை அனுப்புவதற்கு ஸ்பெயின் அரசாங்கமும், அந்நாட்டு வணிகப் பெரு மக்களும் விரும்பவில்லை. ஆனல் அரசியாரின் வற்புறுத்தலினல் கொலம்பசின் பிரயாணத்திற்கு வேண்டிய பெருந்தொகையில் மூன்றில் ஒரு பங்கு ஸ்பெயின் அரசாங்கமே கொடுக்க ஒப்புக் கொண்டது. ஸ்பெயினில் தன வணிகர் பலர் இருந்தனர். அவர்களில் லூயி-டி-சாண்டாங்கல் என்பவரே மிகச் சிறந்தவர் ஆவார். இப்பெரு வணிகரும் பிரயாணச் செலவின் ஒரு பங்கைத் தாமும் தம்முடைய நண்பர்களும் சேர்ந்து கொலம்பசுக்குக் கொடுக்க முன்வந்தனர். மற்றெரு பங்கைக் கொலம்பஸ் தாமே தம்முடைய முயற்சியால் சேகரித்துக்கொள்ளத் தீர்மானித்தார். இம்மூன்று

வழிகளிலும் சேர்ந்து ஏறத்தாழ 60,000 முதல் 70,000 டாலர்கள் வரையில் பணம் சேகரித்துப் பிரயாணத் திற்கு வேண்டிய எற்பாடுகளேச் செய்ய முற்பட்டனர்.

கொலம்பசின் பிரயாணத்திற்கு வேண்டிய கப்பல் கள் தயாராயின. அவைகளேச் செலுத்துவதற்கு வேண்டிய மாலுமிகளும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். அவருடைய கடற்படையில் மூன்று கப்பல்களே இருந்தன. அவைகள், 'சாந்தமேரி', 'பிண்டா', 'நிஞ' என்பனவாம். இக்கப்பல்களே இக்காலத்திலுள்ள பெரு கடலேக் கடக்கும் மரக்கலங்களுடன் ஒப்பிட்டுப் பார்த் தால் கொலம்பசின் மூன்று கப்பல்கள் வெறும் படகுகளே எனலாம். ஏனெனில், கொலம்பசின் கொடிக் கப்பல் 'சாந்தமேரி'யின் கனம் நூறு டன்களும், 'பிரிண்டா'வின் கனம் ஐம்பது டன்களும், 'நிஞ'வின் கனம் நாற்பது டன்களுமே இருந்தன.

சாந்தமேரியில் ஐம்பத்திரண்டு மாலுமிகளும், பிரிண்டாவில் பதினெட்டு மாலுமிகளும், நிஞவில் பதினெட்டு மாலுமிகளுமே இருந்தனர். ஆக எண்பத் தெட்டு மாலுமிகளே கொலம்பசுக்குத் துணேயாகப் புறப்பட்டனர். மற்றும் அரசாங்கப் பார்வையாளர் களும், ஸ்பெயினுலுள்ள வியாபாரச் சங்கங்களின் பிரதி நிதிகளும் கொலம்பசுடன் சென்றனர். தனிப்பட்ட வகையில் முப்பத்திரண்டு பேர்களும் கொலம்பசின் மாலுமிகளுடன் சென்றனர். கொலம்பசின் மாலுமி களில் பலர் கைதிகளாக இருந்தவர்கள்; சிலர் நாடோடி கள். இவர்களில் பெரும்பாலோர் பொன்னுசை பிடித்துப் பிற நாடுகளுக்குச் சென்று குடியேற்ற முயற்சியில் ஈடுபட விரும்பியவர் ஆவர்.

இம் மூன்று கப்பல்களும் தனித்தனியே மூன்று தலைவரின் மேற்பார்வையிலிருந்தன. சாந்தமேரியின் தலைவர்தான் கொலம்பஸ். மற்ற இரு கப்பல்களின் தலைவர்களைக் கொலம்பஸ் தாமே நேரில் தேர்ந்தெடுத்தார். பிரிண்டாவின் தலைவர் மார்ட்டின் அலான்சோ பின்ஜான்; நினுவின் தலைவர் வானிஸ் பின்ஜான் ஆவர். இவ்விரு சகோதரர்களும் கடற்பிரயாணத்தில் நிறைந்த அனுபவம் பெற்றவர்கள்; காரியத்திலேயே கண்ணுக இருப்பவர்கள். பிரயாணத்திற்கு ஏற்ற கூட்டாளிகளை ம் கப்பல்களையும் உணவுப் பொருள்களையும் சேகரித்து ட்டபிறகு 1492-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் இரண்டாம் நாள் கொலம்பசும் அவருடைய மாலுமிகளும் ஸ்பெயின் நாட்டுக் கடற்கரையிலுள்ள பேலாஸ் துறைமுகத்தை அடைந்தனர். அன்று மாலையில் அவ்வூரிலுள்ள கன்னிமேரி திருச்சபையில் பிரார்த்தனை செய்து எல்லாம் வல்ல இறைவன் வழிகாட்டியாக இருந்து காப்பாற்ற வேண்டினர்.

கிறிஸ்தபர் கொலம்பஸ் 1492-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 3-ஆம் நாள் பேலாஸ் துறைமுகத்தினின்று மேற்குப் புறமாகப் புறப்பட்டார். அவர் புறப்படும் போது, ''எங்குச் செல்கிறோம், எப்படிச் செல்கிறோம், எப்படித் திரும்புவோம்,'' என்ற உணர்ச்சிகள் அவர் உள்ளத்தில் எழவில்லை. பல நிகழ்ச்சிகளைத் தம்முடைய மனத்தில் கற்பனை செய்து பார்த்தார். எவ்வித இன்னல்கள் நேரிட்டாலும் அவைகளைச் சற்றும் அஞ்சாது எதிர்த்துத் தம்முடைய முயற்சிகளில் வெற்றி காண மனவுறுதி பூண்டிருந்தார். பிரயாணத்தின் போது 'பிரிண்டா' முதலில் சென்றது. அதற்குப்பின் ஸ்பெயின் நாட்டுக் கொடி கட்டிய தலைவரது கப்பல்

'சாந்தமேரி' சென்றது. கடைசியாக 'நிஞு' சாந்த மேரியைத் தொடர்ந்து சென்றது.

கப்பல்கள் அஸோர்ஸ் கடலைக் கடக்கும் வரையில் எவ்விதமான ஆபத்தோ அல்லது நட்டமோ ஏற்பட வில்லை. முதன் முதலில் கொலம்பஸ் 'சால்ட்ஸ்' என்ற இடத்தை அடைந்தார். பிறகு இரண்டொரு நாட்கள் பிரயாணம் செய்து கானெரித் தீவுகளை அடைந்தார்.



கொலம்பசின் மூன்று கப்பல்கள்

கொலம்பசைச் சுற்றி எங்கும் பரந்த கடலும் முடிவில்லாத விசும்பும் காணப்பட்டன. ஒரு திங்கள் பிரயாணத்திற்குப் பின் தலைவர் கொலம்பஸ் கொமேரா என்ற தீவை அடைந்தார். அது வரையில் அவருடைய பிரயாணத்தில் எவ்விதமான இன்னலும் இடையூறும் ஏற்படவில்லை. எதிர்பாராதவிதமாக அத்தீவில் கொலம்பஸ் மூன்று வாரங்கள் தங்க வேண்டியதாயிற்று. அநுகூலமான காற்று வீசவில்லை; கொமேரா தீவுக்கப்

பால் இதுவரை எந்த வீர மாலுமியும் பிரயாணம் செய்ததில்லை. அனுகூலமான காற்று ஒருநாள் வீசிய பொழுது கொலம்பஸ் புறப்பட்டு மேற்காகக் கப்பல்களை நெட்டிச் செலுத்திக்கொண்டு போனார். பிறகு சரகோஸாக் கடலையடைந்து நேர்மேற்காகப் பிரயாணம் செய்தார்.

## மாலுமிகளின் எதிர்ப்பும் சோர்வும்

கொலம்பஸ் மென்மேலும் முன்நோக்கிச்சென்ற போது அவருக்குப் பல இன்னல்களும் அபாயங்களும் ஏற்பட்டன. முதன்முதலில் பயங்கரமான பெரும் புயல் காற்று விடாமல் அடிக்க ஆரம்பித்தது. கையிலிருந்த உணவுப் பொருள்கள் பெரும்பாலும் தீர்ந்துவிட்டன. பல நாட்கள் பிரயாணம் செய்தும் நிலப்பகுதிகளின் அறிகுறிகளைச் சிறிதேனும் மாலுமிகள் காணவில்லை, கப்பலோட்டிகள் தங்களுடைய நாட்டையும் மனைவி மக்களையும் விட்டுக் கொலம்பசின் பேச்சை நம்பி மோசம் போனோமென்று மனங்கலங்கி வெளிப்படை யாகவே கொலம்பசின் மீது குற்றம் சாட்டினர்; இரண்டொரு முறை இவரைத் தூக்கி ஆழ்கடலில் எறிந்துவிட்டுக் கப்பல்களைத் தங்கள் நாட்டிற்குத் திருப்பலாம் என்று கூடத் தீர்மானித்தனர்; மேற்கொண்டு முன்நோக்கிச் செல்லக்கூடாது எனக் கொலம்பசை வற்புறுத்தினர்.

கொலம்பஸ் சற்றுக் கலக்கமுற்றாலும் கடைசியாக இன்னும் மூன்று நர்ட்களுக்குள் ஏதேனும் நிலத்திட்டுக் காணாவிடின் கப்பல்களைத் திருப்பி ஸ்பெயின் நாட்டிற்குக் கொண்டுபோய்ச் சேர்த்து விடுவதாக உறுதிமொழி கூறினார். அதன் மேல் கொலம்பசின் மாலுமிகள்

சற்றுத் துணிந்து தங்களுடைய கப்பல்களை மேலும் செலுத்தினர். அன்றிரவு சுமார் இரண்டு மணிக்குப் பிரிண்டாவின் தலைவரான மார்ட்டின் ஏதோ ஒரு கரையில் விளக்கு வெளிச்சத்தைக் கண்டார். உடனே, 'நிலம் நிலம்' என்று கூச்சலிட்டார். அச்செய்தி கொலம்பசுக்கு எவ்வளவு மகிழ்ச்சி யுண்டாக்கியிருக்க வேண்டும்!

## 5. புது உலகம் காணல்

அக்டோபர் மாதம் 12 ஆம் நாள் கொலம்பசும் அவருடைய சகாக்களும் ஸ்பெயினிலிருந்து புறப்பட்டு மனோதிடத்தாலும் விடா முயற்சியினாலும் இரண்டு மாதங்கள் நெடுந்தூரம் பிரயாணம் செய்தபின் கடைசியாகச் சில மரங்களின் கிளைகளும் பழங்களும் கடலில் மிதந்து வந்ததைக் கண்டனர். மேலும் அவைகள் தங்கள் கப்பல்களின் மீது மோதுவதைக் கண்டனர். கொலம்பஸ் கடற்கரையில் மின் மினிப் பூச்சியைப்போல் ஒளி விட்டு எரிந்து கொண்டிருந்த விளக்கைக் கண்டு நிலத்தை யடைந்து விட்டதாகக் கருதி, அதற்கு அடையாளமாகத் தம்முடைய பீரங்கிக் குண்டை வெடித்தார். பிறகு பாய்மரங்களை இறக்கிக் கப்பல்களை நங்கூரத்தினால் நிறுத்தி அனைவரும் ஆவலோடு கதிரவன் எழுச்சியை எதிர்பார்த்தனர். கதிரவன் உதித்ததும் தமக்கு முன்பாக ஒரு தீவும் அதில் மக்களும் மரங்களுமிருப்பதையும் கண்டனர். பிறகு ராட்ரிகோ சாங்கஸ் என்ற அரசியாரின் பார்வையாளரை வரவழைத்துக் கடற்கரையை நோக்குமாறு வேண்டினார். ஒரு நொடியில் அரசாங்கப் பார்வையாளரும் கொலம்பஸ்

குறிப்பிட்ட திசையை உற்றுநோக்கி, மக்கள் அங்குமிங்கும் சென்று கொண்டிருப்பதைக் கண்டார்.

இசபெல்லா அரசி முதன் முதலில் நிலப்பகுதியின் அறிகுறியைக் காண்பவருக்குப் பத்தாயிரம் ஸ்பானியப் பொற்காசுகள் பரிசு வழங்குவதாக அப் பார்வையாளரிடம் சொல்லியனுப்பியிருந்தார். இப்பரிசை முதன் முதலில் நிலத்தைக்கண்ட பிண்டாவின் கப்பலோட்டியான ராட்ரிகோ டிரையானு என்பவருக்கே கொடுக்க வேண்டும். ஆனால் இசபெல்லா அரசியார் இதைக் கொலம்பசுக்கு அளித்தார்.

கி. பி. 1492 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 12 ஆம் நாள் வெள்ளிக்கிழமை அதிகாலையில் கொலம்பஸ் புத்தாடை அணிந்து கையில் ஸ்பெயின் நாட்டுக் கொடியுடன் முதன்முதலில் கப்பலை விட்டுக் கீழிறங்கிக் கரையைச் சேர்ந்தார். அவருடைய ஆட்கள் அனைவரும் அவரைத் தொடர்ந்து, 'வாழ்க ஸ்பெயின்!' 'வாழ்க கப்பற்படைத் தலைவர் கொலம்பஸ்!' என்று முழக்கிக் கொண்டு கப்பலைவிட்டுக் கீழிறங்கிக் கரை சேர்ந்தனர். இனிமேல் அக்கப்பலோட்டிகள் அனைவரும் தலைவர் கொலம்பசுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக உறுதிமொழி கூறினர். உலக வரலாற்றில் கொலம்பஸ் தாம் கண்டு பிடித்த தீவில் வந்து இறங்கிய சாதனை, அவருடைய நீண்டகால எண்ணத்தை நிறைவேற்றியதைக் குறிப்பதன்றிப் புதிய உலகம் என்று அழைக்கப்படும் அமெரிக்காவைக் கண்டு பிடித்த வீர மாலுமி அவர் என்பதையும் காட்டுகின்றது. கொலம்பஸ் தாம் இறங்கிய தீவைச் சுற்றிப் பார்த்தார். அத்தீவில் பலவித மரங்களும் பறவைகளும் வண்ண வண்ண மலர்களும் நிறைந்திருப்பதைக் கண்டார்.

கொலம்பஸ் இறங்கிய தீவில் நறுமணத் தென்றல் தவழ்ந்தது. தேன் சொரியும் பூஞ்சோலைகள் கண்ணுக் கினிய விருந்தளித்தன. தெள்ளிய நீரும் துள்ளி வரும் ஓடைகளும் உள்ளத்தைக் கவர்ந்தன. இவ்வியற்கை எழில் மிக்கதொரு தீவில் கொலம்பஸ் இறங்கியபோது சிவப்பு நிற மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து நின்றனர். கொலம்பஸ், ''செவ்விந்தியர்கள் வந்து நம்மைக் காணு கின்றனர்; இத்தீவு இந்தியத் தீவுகளில் ஒன்றுக இருக்க வேண்டும்; நாம் இந்தியாவைக் கண்டுவிட்டோம்,'' என்று நினைத்து உவகை பூத்தார்.

இன்று மேற்கிந்தியத் தீவுகள் என்று அழைக்கப் படும் தீவுக் கூட்டங்களில் ஒரு பகுதியான பஹாமாத் தீவுகளுள் ஒன்றைத்தான் கொலம்பஸ் கண்டுபிடித்தார். ஆனால் தாம் ஆசியாக் கண்டத்திற்கு வந்துவிட்டதாகத் தவருக எண்ணினர்; தாம் வந்து இறங்கிய தீவுக்கு 'சான் சால்வடார்' என்று பெயரிட்டார். அதற்கு 'ஆபத்துக்கு உதவும் தோழன்' என்பது பொருள். கொலம்பஸ் தாம் வந்து இறங்கிய கரையை இந்திய நாட்டின் கீழ்க்கரை என்று திண்ணமாக நம்பியதால் அதுமுதல் அந்நாட்டு மக்களை 'இந்தியர்கள்' என்று அழைத்தார். மார்க்கொபோலோ எழுதிவைத்த குறிப் புகளிலிருந்து கீழை நாடுகளைக் குப்ளாகான் என்ற பேரரசர் 'மஹாகான்' என்னும் புகழுடன் ஆண்டு கொண்டிருந்தார் என்று மேனுட்டு மக்கள் எண்ணி யிருந்தனர். அவ்வரசரே அத்தீவிலிருப்பார் என்றெண்ணித் தூதர்களை அனுப்பினர். அவருடைய தூதர்கள் அப்பெயருடைய அரசர் ஒருவருமில்லை என்று திரும்பிவிட்டனர். முடிவில் கொலம்பஸ் தாம் இறங்கிய இடம் பெரிய கண்டமன்று என்று தெரிந்து கொண்டார்.

பஹாமாத்தீவுகளை ஆராய்ந்த பிறகு கொலம்பஸ் கியூபா, போர்டொரிக்கோ முதலிய தீவுகளைக் கண்டு பிடித்தார். திரும்பி வருகையில் பஹாமாத் தீவுகளில் ஒன்ருன 'இஸ்பானியோலா'வில் ஸ்பானியர் குடியேற்றம் ஒன்றை அமைத்து, அத்தீவுகள் அனைத்தையும் ஸ்பானிய அரசாங்கத்திற்கு உரிமையாக்கினுர். ஆனுல் சில ஆண்டுகளுக்குப்பின் இக்குடியேற்றம் பாழடைந்து போயிற்று.

### கொலம்பஸ் நாடு திரும்பல்

மேற்கிந்தியத் தீவுகளைக் கண்டுபிடித்து ஆராயும் போது கொலம்பசின் கொடிக்கப்பலான 'சாந்த மேரி' பெரும் விபத்துக்குள்ளாகி உடைந்து போயிற்று. ஆகவே தலைவர் கொலம்பசும் அவருடைய ஐம்பத்திரண்டு மாலுமிகளும் 'நிஞ' என்ற கப்பலுக்கு மாற்றப்பட்டனர். கொலம்பஸ் தம்முடைய முதல் பிரயாணத்திஞல் அட்லாண்டிக் பெருங்கடலுக்கும் பசிபிக் பெருங்கடலுக்குமிடையில் உள்ள புதியதொரு பெருநிலப் பரப்பைக் கண்டுபிடித்தவராஞர்.

*1492* ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பேலாசிலிருந்து புறப்பட்ட கொலம்பஸ் எட்டுத் திங்களுக்குப் பின் தம்முடைய நாட்டை நோக்கிப் பிரயாணமாஞர். நாடு திரும்பும்போது தாம் கண்டுபிடித்த புதிய தீவுகளிலிருந்து நாகரிகமற்ற ஆறு சிவப்பு இந்தியர்களையும், பல நூதன மிருகங்களையும், அழகிய பறவைகளையும் புதுமையான செடிகளையும், பொன்ஞபரணங்களையும் சேகரித்துக் கொண்டார். வரும்போது கடல் பொங்கிப் புயல் அடித்தது. எல்லாவித அபாயங்களுக்கும் ஈடு கொடுத்துக் கடைசியில் கொலம்பஸ் வெற்றி வீரராக

1493 ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மீண்டும் ஸ்பெயின் நாட்டுத் துறைமுகமான பேலாசை அடைந்தார்.

பேலாஸ் துறைமுகத்தில் இறங்கிய கொலம்பசும் அவருடைய வீர மாலுமிகளும் வெற்றி வீரர்களாகப் பார்சிலோனு நகரத்திற்கு அழைத்துச் செல்லப் பட்டனர். ஸ்பானியர்கள் திரள் திரளாகக் கொலம் பசைச் சூழ்ந்துகொண்டு உபசரித்து, அவர் தம்முடன் கொண்டுவந்த நாகரிகமற்ற மனிதர்களையும், விநோதப் பொருள்களையும் கண்டு களித்தனர். மக்கள் கொலம்பசை ஊர்வலத்தோடு அந்நகரிலுள்ள அரண் மனைக்கு அழைத்துச் சென்றனர். அரண்மனையில் பெர்டினுண்டும் இசபெல்லாவும் பொன்னுலும் பட்டா லும் அலங்கரிக்கப்பட்ட ஒரு விதானத்தின் கீழ் அமர்ந் திருந்து கொலம்பசை வரவேற்று, புதிய கண்ட மொன்றைக் கண்டுப் பிடித்ததற்காகவும் கொலம்பசின் மனோதிடத்திற்காகவும் கடவுளுக்கு நன்றி செலுத் தினர். அரசியார் மற்றெல்லோரையும் விடப் பெரு மகிழ்ச்சி அடைந்தார்.

நாடு முழுவதும் புகழ்பெற்ற கொலம்பஸ் ஒரு நாள் ஒரு பிரபுவின் மாளிகையில் விருந்து உண்ணச் சென்றுர். கொலம்பசிடத்தில் பலர் அழுக்காறு அடைந்திருந் தனர். அவர்களில் ஒருவர் "ஸ்பானியர்களுக்கு நன்மை பயக்கும் செயல்களை வேறு யாரும் கொலம்பசைப் போல் செய்ய மாட்டார்களா?" என்று கேட்டார். உடனே கொலம்பஸ் எழுந்து நின்று அங்குக் குழுமி யிருந்த ஒவ்வொருவரையும் பார்த்து, "இதோ, என் கையிலுள்ள ஒரு கோழி முட்டையை மேஜையின் மீது நேராக நிறுத்தி வைப்பீரோ?" என்று வினவினுர். ஒருவராலும் அவ்வாறு செய்ய முடியவில்லை. உடனே

கொலம்பஸ் அக்கோழி முட்டையைக் கையிலே எடுத்து முனையைச் சிதைத்து நேராக நிறுத்தினர். "இப்போது நான் செய்து காட்டினேன் அன்றோ? இனி நீங்கள் அவ்வாறு எளிதிற் செய்யலாம்," என்று சுட்டிக்காட்டித் தம்முடைய பிரயாணத்தின் பெருமையை நன்கு புலப் படுத்தினர்.

## 6. பின்னர் செய்த பிரயாணங்கள்

கொலம்பஸ் தாம் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றி வீரராகத் திரும்பியதால் அரசரும் அரசியாரும் அவரைப் பெருமையுடன் வரவேற்றுப் பல பட்டங்களையும் பரிசுகளையும் வழங்கி மரியாதை செய்தனர். ஸ்பெயினுக்குக் கொலம்பஸ் மிகவும்பெரிய காரியத்தைச் செய்து கொடுத்ததனுல் அரசரும் அரசியும் முன்னிலும் பெரியதொரு கடற்படையைத் தயாரித்து இரண்டாவது பிரயாணத்தை மேற் கொள்ளும்படி அவரை வேண்டினர். ஆகவே 1493-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் கொலம்பஸ் மூன்று பெருங் கப்பல்களுடனும் பதினன்கு சிறு கப்பல்களுடனும் இரண்டாவது பிரயாணத்தை மேற்கொண்டார். கொலம்பஸ் தாம் முன் சென்ற கடல் வழியாகவே சென்று பஹாமாத்தீவுகளை யடைந்து, அவ்விடங் களிலுள்ள குடியேற்றங்களைக் கண்டார். அங்குள்ள ஸ்பானியர்கள் அத்தீவுகளிலுள்ள பூர்வீகக் குடிகளிடம் தாறு மாருக நடந்து கொண்டதனுல் ஸ்பானியர்களின் குடியேற்றங்கள் சிதறுண்டு போனதைக் கண்டு அவர் மனம் வருந்தினர்.

ஐரோப்பாவில் ஸ்பெயினைச் செல்வமிக்க நாடாகச் செய்ய தங்கம், வெள்ளி முதலிய உலோகப் பொருள்

களைச் சேகரிப்பதற்காக மற்ற இடங்களைக் கண்டுபிடிக்க மேலும் முயன்றார். அங்ஙனம், ஜமேகா, டாமினி முதலிய தீவுகளைப் புதியனவாகக் கண்டுபிடித்து, அவைகளை ஸ்பானியர் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்தார். புதிய உலகத்தில் முதலில் வந்தவர் ஸ்பானியரான



கொலம்பஸ்

படியால் அவர்களுடைய உரிமையை அவ்வுலகில் கொலம்பஸ் நிலை நாட்டினார். பிரயாணத்தின் நடுவில் கொலம்பசுக்குக் கடுநோய் கண்டது. உடல்நலம் குன்றியதால் அவர் நாடு திரும்ப வேண்டியதாயிற்று. நாட்டை விட்டுப் புறப்பட்ட நான்கு மாதங்களுக்குள் கொலம்பஸ் மீண்டும் ஸ்பெயினுக்குத் திரும்பித் தம்முடைய புதிய ஆராய்ச்சிகளை அரசியாரிடம் கூறி அவரை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி, யாவராலும் வெற்றி வீரரென்று புகழப் பெற்றார்.

## மூன்ரும் பிரயாணம்

கி. பி. *1497*-ஆம் ஆண்டில் அரசியாரின் முயற்சியால் கொலம்பஸ் மூன்ருவது பிரயாணத்தை மேற்கொண்டார். பொருள் திரட்டுவதற்கு வழிகாணும் முயற்சி அவரிடம் நிறைந்திருந்ததனுல், பொருள் அவரை வந்தடைந்தது. மூன்ருவது பிரயாணத்தில் கொலம்பஸ் ஆறு பெருங் கப்பல்களில் நூற்றுக்கணக்கான வாலிப மாலுமிகளுடன் சென்ருர். முந்திய பிரயாணங்களில் சென்றதற்கும் மேலாகத் தெற்கு நோக்கிச் சென்று மூன்று பெருமலைத்தீவுகளைக் கண்டார்; இத்தீவுகளுக்கு 'ட்ரினிடாட்' என்று பெயர் கொடுத்தார். பிறகு சடுங்காற்றிலும் மழையிலும் தெற்காகப் பிரயாணம் செய்து தென் அமெரிக்காவின் வடகோடி எல்லையைக் கண்டுபிடித்தார். அவர் இறங்கிய இடம் பாரவளை குடாவில் உள்ளது. அப்போது அவர் இந்தியாவின் கீழ்க் கோடி எல்லையைக் கண்டுபிடித்ததாகவே கருதினுர்; தாம் கண்டுபிடித்த இடங்களுக்குத் தம்முடைய சகோதரரான "பார்த்தலோடுயா" வைக் கவர்னராக நியமித்தார். அவர் நேர்மையாக ஆட்சி புரிந்து ஸ்பெயினைச் செல்வமிக்க நாடாகச் செய்தார். கொலம்பசிடம் அழுக்காறு கொண்ட பல ஸ்பானியப் பிரபுக்கள் அவரை உடனே ஸ்பெயினுக்குத் திரும்பும்படி வற்புறுத்தினர்.

## நான்காம் பிரயாணம்

கிறிஸ்தபர் கொலம்பஸ் *1505*-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நான்காம் முறையாகப் புதிய உலகத்திற்குப் பிரயாணம் செய்தார். இப்பிரயாணத்திற்கும் அரசியாரே பொருளுதவி செய்தார். கொலம்பஸ்

## புதிய கடல் வழிகள்


கண்டு பிடிக் கப்படாதது
ஆசியா
ஐரோப்பா
1492
இந்தியா
1497
கள்ளிக் கோட்டை
தென் அமெரிக்கா
வ
நன்னம்பிக்கை முனை
----- கோலம்பஸ் சென்ற கடல் வழி
—— வாஸ்கோடிகாமா சென்ற கடல் வழி

இம்முறை நான்கு கப்பல்களில் நானூறு மாலுமிகளுடன் ஸ்பெயினிலிருந்து புறப்பட்டு மேற்கிந்தியத் தீவுகளை நோக்கிச் சென்றார். பிறகு தென்மேற்காகப் பிரயாணம் செய்து மெக்சிகோ வளைகுடாவைக் கடந்த பனமா விற்கு வடக்கிலுள்ள ஓரிடத்தில் இறங்கி அவ்விடத்தைச் சுற்றிப்பார்த்து ஆராய்ச்சி செய்தார். புதிய உலகத்தின் நடுப்பாகத்தைச் சுற்றிப் பார்த்துக் குறிப்புக்கள் எழுதி வைத்துக் கொண்டார். ஆனால் அவர் வட அமெரிக்கா விற்குச் செல்லாமல் எட்டுத் திங்களுக்குப்பின் ஸ்பெயினுக்குத் திரும்பினார். கொலம்பஸ் ஸ்பெயினுக்குத் திரும்பும்போது நோய்வாய்ப் பட்டார். படுக்கையி லிருந்த போதிலும் அவர் தம்முடைய பிரயாண நினைவுகளைத் தம்முடைய சிறந்த நண்பர்களுள் ஒருவரான அலான்ஸோ என்பவரிடம் கூறித் தக்க குறிப்புக்கள் எழுதி வைக்கும்படிச் செய்தார். அவர் மேற்கொண்டு செய்வதற்குத் திட்ட மிட்டிருந்த விவரங்களை இப்பிரயாணக் குறிப்புக்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

## 7 ஸ்பெயின் நாடு பெற்ற ஆதிக்கம்

கிறிஸ்தபர் கொலம்பஸ் புரிந்த தொண்டு அவருக்கு ஆதரவளித்த பெர்டினண்டு மன்னருக்கும், இசபெல்லா அரசியாருக்கும், ஸ்பெயின் நாட்டிற்குமே முதலில் பயனளித்தது. ஆனால் காலம் செல்லச் செல்ல உலக முழுவதற்கும் அவருடைய தொண்டு பெரும் பயனை அளிப்பதாயிற்று. ஸ்பானியர் கொலம்பசின் விடா முயற்சியினால் தங்களுக்குக் கிடைத்த முதல் உரிமையைக் கொண்டாடிப் புது உலகத்தில் தங்களுடைய கடலாதிக் கத்தையும் பெருமையையும் ஏற்படுத்தித் தங்களுடைய வெற்றிக்கொடியை நாட்டினர்.

துணிவு மிக்க பல ஸ்பானிய மாலுமிகள் கொலம்பசைப் பின்பற்றலானுர்கள். *1519* ஆம் ஆண்டில் கார்டே என்பவர் மெக்சிகோவைக் கைப்பற்றினுர். பிறகு மேற்கிந்தியத் தீவுகளேயும், தென் அமெரிக்காக் கண்டத்தில் சிலி, பொலிவியா, பெரு என்ற நாடுகளேயும், வட அமெரிக்காவிலுள்ள பிலாரிடா (Florida) என்ற நாட்டையும் ஆக்கிரமித்துக் கொண்டு தங்களுடைய ஆட்சிக்குட்படுத்தினர். ஸ்பெயினில் கிடைக்காத தங்கம், வெள்ளி, உயர்ந்த ரகமான பருத்தி, மக்காச்சோளம், உருளேக்கிழங்கு போன்றவற்றைப் புதிய நாடுகளிலிருந்து ஸ்பானியர்கள் தங்கள் தாய் நாட்டிற்குக் கொண்டு வந்து பயிரிட்டனர். மிக விரைவில் ஸ்பெயின் நாடு ஐரோப்பாவில் செல்வம் நிறைந்து வளம் கொழிக்கும் நாடாக விளங்கியது. கொலம்பசின் அருந்தொண்டினுல் ஸ்பானியர்கள் சற்றேறக் குறைய ஒரு நூற்ருண்டிற்குத் தங்களுடைய கடல் ஆதிக்கத்தைச் செலுத்தி வந்தனர்.

### புதிய உலகத்தின் பெயர்

புதிய உலகத்தைக் கண்டுபிடித்த கொலம்பசின் பெயர் அந்நாட்டிற்கு இடப்படவில்லே. அமெரிக்கோ வெஸ்புகி என்ற வணிகர் ஒருவர் போர்த்துகல் மன்னரின் சேவையில் அமர்ந்து புதிய உலகத்தின் தென் பாகத்தில் குடியேறுவதற்கு முயன்ருர். கி. பி. *1499*, *1500*, *1503* ஆம் ஆண்டுகளில் புதிய உலகத்தின் பல பாகங்களுக்குச் சென்று, அவை மேற்கு ஐரோப்பாவிற்கும் கிழக்கு ஆசியாவிற்குமிடையே உள்ளன என்று அவர் கண்டுபிடித்தார். ஆகவே அமெரிக்கோ வெஸ்புகியின் பெயராலேயே புதிய உலகத்திற்கு ‘அமெரிக்கா’ என்று பெயர் இடப்பட்டது. ஐரோப்பியர்களுக்கு வழி

காட்டியாக இருந்த அறிஞர் கொலம்பசின் பெருமையை மக்கள் அப்போது உணரவில்லை.

## 8. கொலம்பசின் இறுதி நாட்கள்

கி. பி. 1504ஆம் ஆண்டில் ஸ்பெயின் திரும்பிய கொலம்பஸ் நோய்வாய்ப் பட்டுத் துன்புற்றார். தட்ப வெப்ப நிலை மிக மோசமாகவுள்ள பல இடங்களைக் கடந்து சென்றதால் அவரைக் கொடிய நோய் பற்றிக் கொண்டது. கொடிய அயன மண்டலப் பிரதேசங்களில் பலவித நோய்கள் பரவியிருந்தன. ஒருவிதத் தொத்து நோய் அவரைப் பீடித்து வருத்தியது. அக்காலத்தில் உற்ற நோய் இன்னதென அறிந்து, அதற்குத் தக்க சிகிச்சையளிக்கும் மருத்துவ முறைகளைக் கண்டுபிடிக்கவில்லை. நோயின் இயல்பும் இன்னதென்று மக்களுக்குப் புலனாகவில்லை. ஆகவே கொலம்பசுக்குப் பலவித போலிச் சிகிச்சைகள் அளிக்கப்பட்டன. எவ்வித சிகிச்சையினாலும் கொலம்பசின் நோய் தீரவில்லை. "நோய்க்கு மருந்தன்றி என்னுடைய ஆயுள் நீடிப்புக்கு மருந்தா?" என்று அவர் வைத்தியர்களைக் கேட்டதாகக் கூறப்படுகிறது. நாட்கள் செல்லச் செல்லக் கொலம்பஸ் உடல் மெலிந்து சக்தியற்றவரானார். அவருடைய பக்கலில் அவருடைய ஒரேமகன் பிரியாமல் இருந்து அவரைத் தேற்றினான். ஆனால் கொலம்பஸ் மருந்து உட்கொள்வதை அறவே நீக்கித் தம்முடைய இறுதியை எதிர் நோக்கினார்.

ஒரு நாள் அவருடைய உடல் நிலை மிக்க கவலைக்கிடமாயிற்று. கி. பி. 1506 ஆம் ஆண்டு மே மாதம் 20ஆம் நாள் கிறிஸ்தபர் தம்முடைய அறுபதாவது ஆண்டில் உயிர் நீத்தார். அவருடைய நண்பர்களும் உறவினர்களும் உளங் கலங்கிக் கண்ணீர் வடித்தனர். அவ

ருடைய சவம் வல்லாடாலிட் என்ற அழகிய நகரத்தில் அடக்கம் செய்யப்பட்டது. ஆனுல் 1513ஆம் ஆண்டில் அவருடைய பூதவுடல் செவில் நகரத்திலுள்ள 'ஆனு' திருச்சபைக் கோவிலுக்கு மாற்றப்பட்டது. கொலம் பசின் மகன் 1526ஆம் ஆண்டில் இறந்த போது அதே இடத்தில் கொலம்பசுக்கு அருகில் அடக்கம் செய்யப் பட்டார்.

ஸ்பானியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் கொலம்பஸ் தம் விடாமுயற்சியால் செய்த பெருஞ் சேவைக்கு நன்றி செலுத்தும் முறையில் அவர் கல்லறை யின்மேல் பெர்டினுண்டு அரசர், "அவர் ஆன்மா அமைதி பெறுக!" என்ற பிரார்த்தனையை இறைவ னுக்குச் செலுத்தி, தம் பாராட்டுதலைப் பொன்னெழுத் துக்களால் பொறித்து, கொலம்பசின் புகழ் என்றென்றும் நிலைபெறுமாறு செய்தார்.

### போற்றுதற்குரிய பண்புகள்

கிறிஸ்தபர் கொலம்பஸ் இளமை முதல் கடலிற் செல்வதிலும், கப்பலோட்டிகளுடன் உரையாடுவதிலும் பெரு விருப்பங்கொண்டவர். தமது விருப்பத்திற்கேற்ற கல்வியை அவர் கற்ருர். கல்விக்கேற்ற அறிவையும் ஆற்றலையும் நிரம்பப் பெற்றிருந்தார். இப்பண்புகள் அவரிடம் குடிகொண்டிருந்ததனுல் அவர் வாழ்க்கையில் வெற்றி பெற்ருர்.

கொலம்பஸ் வசீகரமான தோற்றமும் கம்பீரமான பார்வையும் பெற்றிருந்தார். உள்ளத்தில் உரமும், துன் பத்தைக் கண்டு சற்றும் கலங்காத நெஞ்சமும் அவரிடம் காணப்பட்டன. இத்தாலி நாட்டை விட்டுப் போர்த் துகல், ஸ்பெயின் முதலிய ஐரோப்பிய நாடுகளில்

பதினேழு ஆண்டுகள் ஆதரவற்று அலேந்து திரிந்த போதிலும், இறுதியில் அவரது விடாமுயற்சி வெற்றி பெற்றது என்பதறிந்து உலகம் மகிழ்வெய்தியது.

கொலம்பசிடம் தந்நம்பிக்கை மிகுதியாக இருந்தது. எவ்வளவோ கப்பலோட்டிகளும் மன்னர்களும் அவரை அதைரியப்படுத்தியும், அவர் நுண்ணறிவினுல் தம்முடைய திட்டத்தைச் சீர்தூக்கிப்பார்த்தார்; ஒரு நல்ல முடிவுக்கு வந்தார். அதன் பிறகு அவர் தந்நம்பிக்கையை இழக்கவேயில்லே. அவர் கடல் வழியைக் கண்டுபிடிக்கப் போவதாகக் கூறியபொழுது, பலர் அவரை இகழ்ந்தனர்; மதி கலங்கியவர் என்று எள்ளி நகையாடினர். இவற்ருல் கொலம்பஸ் தாம் கொண்ட நோக்கத்தைக் கைவிடவில்லே. புதுமையைக் காணவேண்டும் என்ற ஆர்வம் அவர் மனத்தில் குடி கொண்டிருந்தது. அஃது அந்நூற்ருண்டில் நிகழ்ந்த கல்வி மறுமலர்ச்சியின் பயனேயாகும். புதிய உலகம் ஒன்று உண்டு என்று அவருக்குத் தெரியாமலே அதைக் கண்டுபிடித்தார். அவருக்குப் பின் பலர் அவர் சென்ற வழியைப் பின்பற்றியே அமெரிக்க நாட்டின் பல பாகங்களேக் கண்டுபிடித்துக் குடியேறிப் பயனடைந்தனர்.

கொலம்பஸ் தம்முடைய நண்பர்களே அன்புடன் போற்றும் இயல்புடையவர். தம்முடைய கப்பலோட்டிகள் தம்மைக் கடலில் தூக்கி எறிய முயன்றபோதும், அவர் அவர்களே அன்பு மொழிகளால் தம் வயப்படுத்திஞர்.

நிலேபெற்ற புகழ்

பிற்காலத்தில் உலக மக்கள் கிறிஸ்தபர் கொலம்பஸ் நிறைவேற்றிய காரியங்களேப் பற்றி நினேத்த வண்ண

மிருந்தனர். கொலம்பசின் நினைவுச் சின்னமாக உல குள்ளளவும் பல நாடுகளுக்கும், மாநிலங்களுக்கும், மாவட்டங்களுக்கும், ஆறுகளுக்கும், நகரங்களுக்கும், சிற்றூர்களுக்கும் அவருடைய பெயரே கொடுக்கப் பட்டுள்ளது.

உலகில் புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கக் கொலம்பஸ் எத்தகைய பாடுபட்டார்! அவர் தளராத ஊக்கமும், ஆழ்ந்த சிந்தனையும் உடையவர் அல்லரோ? கொலம்பசை வாழ்க்கையின் இறுதியில் உலகம் போற்றியது. இப்பூவுலக வாழ்வை நீத்த பிறகு அவரை இவ்வுலகம் பெரிதும் போற்றுகின்றது. அவரது வாழ்க்கை வரலாறு மாணவர்களுக்கும் மற்றவர் களுக்கும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். கொலம் பசைப் போன்ற அறிஞர்களின் திறத்தினாலன்றோ இன்றைய உலகம் உய்கின்றது? ''தன் விதிக்குத் தானே தலைவன்'' என்பதை மாணவர்கள் அவர் வாழ்க்கையி லிருந்து அறிந்து கொள்ள வேண்டும்.

கிறிஸ்தபர் கொலம்பஸ் இவ்வுலக வாழ்வினை நீத்து, ஏறத்தாழ நானூற்றைம்பது ஆண்டுகள் கழிந்து விட்டன. அவர் மறைந்தும் அவருடைய பெயரும் புகழும் அழியாது நிலைத்துள்ளன.

''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே.''

பயிற்சி

## தால்ஸ்தாய்

அடியிற் குறிப்பிட்டுள்ள பொருள்கள் கட்டுரைப் பயிற்சிக்குரியன :

(1) லியோ தால்ஸ்தாய் பிறந்த போதிருந்த உருஷியப் பெரும் பண்ணை வாழ்க்கை.

(2) தால்ஸ்தாயின் இளமைப் பருவம்.

(3) பதினைந்து வயது வரையில் தால்ஸ்தாய் பெற்ற கல்விப் பயிற்சி.

(4) களான் நகர வாழ்க்கையைப் பற்றியும், மாஸ்கோ வாழ்க்கையைப் பற்றியும் தால்ஸ்தாய் உள்ளத்தில் எழுந்த கருத்துக்கள்.

(5) தால்ஸ்தாய்க்குக் கல்லூரிப் படிப்பில் வெறுப்பேற்படக் காரணம்.

(6) தால்ஸ்தாயின் இராணுவத் தொண்டு.

(7) செயின்ட் பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் தால்ஸ்தாயின் வாழ்க்கையும் அனுபவங்களும்.

(8 வெளிநாட்டுப் பிரயாணங்களால் தால்ஸ்தாய்க்கு ஏற்பட்ட அனுபவங்கள்.

(9) கற்பிக்கும் முறைகளைப்பற்றித் தால்ஸ்தாயின் கருத்துக்கள்.

10) மணவாழ்க்கைக்குமுன் தால்ஸ்தாயின் பொது நலத் தொண்டு.

(11) சமயத்துறையில் தால்ஸ்தாய் விரும்பிய சீர்திருத்தங்கள்.

(12) தால்ஸ்தாயின் மணவாழ்க்கையும் அவரது குடும்பமும்.

(13) தால்ஸ்தாயின் நூல்கள்.

(14) காந்தியடிகளும் லியோ தால்ஸ்தாயும்.

(15) இறுதிக் காலத்தில் தால்ஸ்தாய்க்கு ஏற்பட்ட இன்னல்கள்.

(16) லியோ தால்ஸ்தாய் வாழ்வுக்கு வழி காட்டிய பேரறிஞர்.

## கொலம்பஸ்

(1) மறுமலர்ச்சியும் புது நாடு காண்டலும் என்ற தலைப்பின் கீழுள்ள கருத்துக்களை ஒரு பக்கத்தில் தெளிவாக எழுதுக.

(2) கொலம்பசின் இளமைப் பருவத்தில் நடந்த நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுக.

(3) போர்த்துகல், ஸ்பெயின்—இந்த நாடுகளில் கொலம்பஸ் என்னென்ன முயற்சிகள் செய்தார்? முடிவென்ன?

(4) கொலம்பசின் பிரயாணங்களுக்கு இசபெல்லா அரசி காட்டிய ஆதரவும் உதவியும் பற்றி விரிவாக எழுதுக.

(5) கொலம்பஸ் செய்த நான்கு பிரயாணங்களில் அவர் கண்டுபிடித்த இடங்களைக் குறிப்பிட்டு, அவற்றால் ஸ்பெயின் நாடு அடைந்த பயன்களை விவரிக்க.

(6) கொலம்பசின் இறுதி நாட்களைப் பற்றி 20 வரிகள் எழுதுக.

(7) கொலம்பசின் போற்றுதற்குரிய பண்புகள், அவருடைய நிலைபெற்ற புகழ்—இவை குறித்து விரிவாக எழுதுக.